# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



தி.மு.க.வுக்கு கவுண்ட் டவுன்!

ALKI ● 15.08.2010 ● ரூ.10.00 ● 132 பக்கங்கள்

ஆடி ஸ்பெஷல்

தங்கத்தில் முதலீடு தப்பா?

ஆடித் தள்ளுபடி –நம்பலாமா?

இணைப்பு புத்தகம்:




வழங்கும்

கோலாகல கோனியம்மன்!

நடிகர்கள் கேள்வி கேட்கக்கூடாது!

சைபால் எல்லோர் வீட்டிலும் இருக்க வேண்டிய ஒன்று






# இதம் தந்து
# ரணம் ஆற்றும்...







# சைபால்

**BEST SKIN OINTMENT**

எரிச்சல் தரும் வெட்டுக்காயத்தின் மேல் சைபால் தடவுங்கள். எரிச்சலைப் போக்கி இதம் தரும். காயம் இருந்த சுவடே காணாமல் போகும்.

★ வெட்டுக்காயம் ★ முகப்பரு ★ சேத்துப்புண் ★ தேமல் ★ வேனல்கட்டி
★ பித்தவெடிப்பு முதலிய வியாதிகளுக்கு சிறந்தது.

உரிமையாளர் : சைபால். S. சங்கரநாராயணன்

Mfrs. : **THE SOUTH INDIAN MFG. CO.,** MADURAI-20. Ph : 2534108

# கல்கி

அடுத்த இதழிலிருந்து...

புதிய
உற்சாகத்துடன்...

ஞாநியின்

# ஓ பக்கங்கள்

அதிரடி... அட்டகாசம்

ஆரம்பம்..!

"ஜோதி கிருஷ்ணாவை, நான் லண்டனில் சினிமா தொடர்பான படிப்பு படிக்க வைத்ததற்குக் காரணமே ஹாலிவுட்டில் படம் எடுக்க வைக்கத்தான். ஆனால், அவன் தமிழ் சினிமா மேல் உள்ள காதலால் தமிழ்ப் படங்கள் எடுக்கிறான். 'நட்புக்காக' படத்தின் கதையை அவன் என்னிடத்தில் சொன்னபோது பத்தாம் வகுப்பு மாணவன். அவன் கதை சொல்கிறேன் என்று சொன்னதும் நான் எதிர்பார்த்தது காதல் கதைதான். ஆனால், 'நட்புக்காக' கதை முதிர்ச்சியான நட்பை அடிப்படையாகக் கொண்டு வெளிவந்து வெற்றியடைந்த படம். அதில் வரும் ஃப்ளாஷ்பேக் காட்சி உத்தியை நான் இயக்குநர் ஷங்கர் படங்களிலிருந்து கற்றுக்கொண்டேன் என்று சொன்னான். அப்போதே எனக்குப் புரிந்துபோயிற்று ஜோதிகிருஷ்ணாவின் களம் சினிமாதான் என்று. ஆனால் ஹீரோவாக நடிப்பது உண்மையிலேயே எனக்கு ஷாக்தான்" - தன் மகன் ஜோதிகிருஷ்ணா ஹீரோவாக நடித்து இயக்கும் 'ஜலலல்லா' பாடல் வெளியீட்டு விழாவில் தயாரிப்பாளர் ஏ.எம்.ரத்னம் பேசியது.

# ஒரு மரம் ஐந்து நாள் சண்டை!

சண்டைக் காட்சிகள் இதுவரை ரெஸ்டாரண்டில், பாழடைந்த குடோன்களில் படமாக்கப்பட்டிருக்கும்; ஆனால் முதல்முறையாக மரத்தில் மட்டுமே படமாக்கப்பட்டிருக்கிறது. மரத்தை விட்டு இறங்காமலேயே எதிரிகளை அடித்து வீழ்த்தும் காட்சிகள் ஆர்.கே.வேர்ல்ட்ஸ் தயாரிப்பில் இயக்குநர் பி.வாசுவின் இயக்கத்தில் ஆர்.கே. நடிக்கும் 'புலிவேஷம்' படத்துக்காகத்தான் இந்தச் சண்டைக்காட்சி. இந்தக் காட்சியை அமைக்க வாகான மரத்தை மகாபலிபுரம் அருகே கண்டுபிடித்து அதில் ஐந்து நாட்கள் படமாக்கி இருக்கிறார்கள். லேட்டஸ்ட் கேமராவான 'ஸ்கார்பியோ' கேமரா இதற்குப் பயன்படுத்தப்பட்டு இருக்கிறது. இது குறித்து சண்டை பயிற்சி இயக்குநர் ராஜசேகர், "இப்படியொரு காட்சியைப் படமாக்குவது சண்டைக் கலைஞர்களுக்கு ரிஸ்க்தான். சாதாரணத் தரையில் என்றால் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்து கொள்ளலாம். மரத்தில் சண்டை செய்யும் பொழுது பாதுகாப்புக்கு உத்திரவாதமில்லை. ஆனாலும் ரிஸ்க் எடுத்துப் படமாக்கினோம். இருபத்தைந்து சண்டைக் கலைஞர்கள் இதில் பயன்படுத்தப்

# கல்கி 15.08.2010



பட் டனர். ஹீரோ ஆர்.கே ஸார் ஐந்து நாட்களில் அதிக நேரம் மரத்திலேயே இருந்தார். ரிஸ்க் எடுத்து சிறப்பாகச் செய்தார். இந்தக் காட்சி படத்துக்கு மிகப் பெரிய பலம்'' என்கிறார்.

– மகிமைராஜன்






கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி

பொறுப்பாசிரியர் : ஆர்.வெங்கடேஷ்

உதவி ஆசிரியர்கள் : கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு : எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888

தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு : 044 - 4343 8822

kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு : 044 - 4343 8811

marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு : 044 - 4343 8833

subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு : 044 - 4343 8844

sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

இணையதளத்தில்... வாங்கி, வாசித்து, மகிழ... www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :

உள்நாடு : ரூ.500/-

வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

● எம். சம்பத்,
வேலாயுதம்பாளையம்.

**இந்தியா போன்ற நாடு, காமன்வெல்த் விளையாட்டுப் போட்டி போன்றவற்றுக்கு ஆயிரக்கணக்கான கோடி ரூபாய்களைச் செலவிடுவது - வீண் என்று மணிசங்கர் அய்யர் கூறியிருப்பது - சரிதானே..?**

முறையாகச் செலவிட்டால் விளையாட்டுத் துறை வளம் பெறும். தற்போது நிகழ்வதுபோல் முறைகேடாகப் பல கோடிக் கணக்கில் ஊழல் செய்தால், சில அரசியல்வாதிகளும் அதிகாரிகளும் மட்டுமே வளம் பெறுவார்கள்.

● எம். மிக்கேல்ராஜ்,
சாத்தூர்.

**இப்போது நாட்டில் கள்ளக் காதல்களும் விவாகரத்துகளும் அதிகமாகிவிட்டது எதைக் காட்டுகிறது?**

1. காசேதான் கடவுளடா உணர்வு; 2. பெண்ணுரிமைகள் வலிமை பெறல்; 3. இதனால் ஆணாதிக்க உணர்வு சிலிர்த்தெழல்; 4. பெற்றோர்களின் ஆளுமை தேய்ந்து போனது; 5. கல்வி தரும் சுதந்திர உணர்வு, தன்னம்பிக்கை; 6. பெண்களுக்கு வேலைவாய்ப்பு தரும் பொருளாதாரப் பாதுகாப்பு; எல்லாவற்றுக்கும் மேலாக 7. பண்பாடு சீரழிவு என்று பல காரணங்கள். டாக்டர் பட்டத்துக்கு ஆய்வு நடத்தலாம்.

● வீ. உதயக்குமரன், வீரன்வயல்.

**இன்னும் பத்தாண்டுகளில் திரையரங்குகளின் நிலை எப்படி இருக்கும்? (இப்போது ஒரே தியேட்டரில் ஒரே படத்தை 100 நாள்கள் ஓட்ட முடிவதில்லை).**

வீட்டு டி.வியே தியேட்டர் அனுபவத்தைத் தரும் என்பதால் இன்றைய சராசரி தியேட்டர்கள் மதிப்பிழக்கும். இனி முப்பரிமாண 3டி சினிமாக்களின் காலம். ஸ்பெஷல் எஃபெக்ட்ஸும் அனிமேஷனும் கோலோச்சும். சின்னத் திரையரங்குகள் திருமண மண்டபங்கள் ஆகும். மல்டிப்ளெக்ஸ்களில், ஐமேக்ஸ் தியேட்டர்கள் உருவாகும்.




# கலைஞரிஸம்

● த.பரதன், திருவாரூர்.

**ஆந்திராவில், பாலாற்றின் குறுக்கே அணை கட்டினால் உடைப்போம் என்கிறாரே அன்புமணி ராமதாஸ்?**

அது அப்புறம்; நாகரிக ஜனநாயக அரசியலை இப்போதே உடைத்தெறிந்து விட்டார்.

> ☐ ரூ.150/- பரிசு பெறுபவர்:
> அ.ச. நாராயணன்,
> பாளையங்கோட்டை.
>
> * ரூ.75/- பரிசு பெறுபவர்:
> வி.விஜயலட்சுமி,
> கொட்டிவாக்கம்.

● ரா. பாலாஜி,
ஜமீன் பல்லாவரம்.

**நடிகர் கருணாஸ் நேர்த்திக்கடன் செலுத்த கண்டி முருகன் கோவில் செல்ல நாம் தமிழர் இயக்கம் எதிர்ப்பதாகக் கூறுகிறாரே! தனிமனித சுதந்திரத்தில் தலையிட யாருக்கு உரிமை உண்டு?**

இன உணர்வு என்ற பெயரில் கட்டப் பஞ்சா

யத்து நடத்துவது அவலம். இதையெல்லாம் முளையிலேயே கிள்ளி எறிய வேண்டியது அரசின் கடமை; வளர விடுவது மடமை.

● வி.விஜயலட்சுமி,
கொட்டிவாக்கம் *

**துறவியாக ஆகாமலே மனிதர்களுக்கோ, பிராணிகளுக்கோ தொண்டு செய்ய முடியாதா? 21 - 22 வயதில் பெற்றோர்களின் கனவுகளைச் சிதைத்துவிட்டு துறவியாக ஆவது ஒரு 'ஃபேஷன்' ஆகிவிட்டதே?**

ஃபேஷனுக்காக மேற்கொள்ளப்படும் துறவு உண்மையானதாக இராது. துறவு இதயபூர்வமானது. இறைவுணர்வும் தொண்டுள்ளமும் அதன் இரு பரிமாணங்கள். மூன்றாவது பரிமாணம் ஞானம். அது தேடலில் வருவது. இந்தியாவில்தான் இல்லறத்துறவி காந்திஜி வாழ்ந்தார். துறவி ஆதிசங்கரரும் அவதரித்தார்.

● பெ.பொன்ராஜா, மதுரை.

**நான் ஜெயலலிதாவைச் சந்திப்பேன். அதை பெருமையாகக் கருதுகிறேன். மீண்டும் அ.தி.மு.க.வில் இணைவேனா இல்லையா என்பதை அம்மாவிடமே சொல்வேன் என்று எஸ்.வி.சேகர் கூறுகின்றாரே?**

எஸ்.வி.சேகர், முதலில் தி.மு.க. தலைவர்களை முட்டாளாக்கி, பின்னர் அ.தி.மு.க. தலைவரையும் முட்டாளாக்கும் முயற்சியில் இறங்கலாம்; ஆனால், மக்களை முட்டாளாக்கவே முடியாது!

● சங்கீத சரவணன், மயிலாடுதுறை

**பேருந்து நெருக்கு நேர் மோதல், இரயில் தண்டவாளம் தகர்ப்பு, விமானம் மலைகளில் மோதல், மனிதன் பயணிக்க கண்டுபிடித்தது எல்லாம் இன்று பயந்து நடுங்க வேண்டியதாகிவிட்டதே... ஏன்?**

உங்கள் பெயரில் உள்ள சங்கீதம் நமது வாழ்க்கைப் பயணத்தில் குறைந்துபோய், குழாய்ச் சண்டைகள் அதிகரித்துவிட்டது தான் அடிப்படைக் காரணம் சரவணன்!

● இரா.சக்கரபாணி, மதுரை.

**விலைவாசி உயர்வுக்கு மத்திய அரசு காரணம் இல்லை என்று மத்திய நிதியமைச்சர் பிரணாப் முகர்ஜி கூறியுள்ளாரே?**

ஆமாம்; ஆமாம்! மத்திய அரசும் காரணமில்லை; மாநில அரசும் காரணமில்லை. இவர்களுக்கெல்லாம் வோட்டுப்

# தெரியுமா?



* தகுதிக்கு விருது!

போட்ட மக்கள்தான் காரணம்!

● பவானி கிருஷ்ணா,
பெங்களூரு.

**ரூ.100 கோடி ஒதுக்கீடு செய்து தமிழ்நாட்டில் உள்ள 100 ஆண்டுகள் ஆகியும் கும்பாபி ஷேகம் காணாத பாழடைந்த 1200 கோவில்களுக்கு கும்பாபி ஷேகம் செய்யப் போகிறதாம் தமிழக அரசு. நாத்திக அரசாக இருந்தாலும் இந்தச் செயலுக் காக தி.மு.க. அரசைப் பாராட்ட வேண்டாமா?**

அரசுக்கு ஆத்திகம், நாத்திகம் இரண்டுமே இருக்க முடியாது. பொறுப்புக்கு வந்துள்ளவர் நாத்திகர். இருந்தாலும், அரசின் கடமையைச் செய்திருக்கிறார். அவ்வளவுதானே? பாராட்ட லாம்.

● த.கோவிந்தராஜன், குடியாத்தம்.

**மகாபாரதத்தில் போர்க்களத்தில் கீதோ பதேசம் சொன்னதாகப் படிக்கிறோம். போர்க்களத்தில் உபதேசம் செய்யவும் அதைக் கேட்டுக்கொண்டு இருக்கவும் கூட நேரம் இருக்குமா?**

போரில் கூட அறம் பின்பற்றப் பட்ட காலம் அது. தர்மத்தைப் பற்றிய சிந்தனையே இல்லாத இந்த நாளில் கூட, செஞ்சிலுவைச் சங்க வாகனங்களைத் தாக்கக் கூடாது என்கிற நடைமுறை உள்ளது. ஒருபக்கம் போர் நடக்கும்போதே இன்னொருபுறம் தளபதிகள் வியூகங் களை விவாதித்த படிதான் இருக் கிறார்கள்.


* அபாயமணி!


* அம்மாவுக்கு அல்வா!

● கமாலி, மேலப்பாலையூர்.

**செட்டியார், முதலியார், தலித் போன்ற யாரிடம் பிராம்னி ஸம் இருந்தாலும் நான் எதிர்க் கிறேன் என்கிறாரே கலைஞர். பிராம்னிஸம் என்று எதைக் குறிப்பிடுகிறார்? அது அரசியல் வாதியிடம் இல்லையாமா?**

இப்படியெல்லாம் பேசுவது தான் கலைஞரிஸம். அது யாரி டம் இருந்தாலும் எதிர்ப்பவர் களும் தமிழகத்தில் இருக்கிறார் கள்!

● எம். சம்பத்,
வேலாயுதம்பாளையம்.

**சாய்னா நேவாலுக்கு, விளை யாட்டுத் துறையின் உயரிய விருதான 'கேல் ரத்னா' வழங் கப்பட்டிருப்பது குறித்து...?**

போற்றுதலுக்குரிய நடவடிக்கை... (அப்பாடா! அரசாங்கத்தைப் போற்ற அபூர்வமாக ஓரிரு விஷயங்கள் கிடைத்துதான் விடுகின்றன!)

● அ.ச. நாராயணன்,
பாளையங்கோட்டை ❒

**முதல்வர் பரிசீலனை அறிவிப் பின்படி மீண்டும் மதுவிலக்கு அமுல்படுத்தப்பட்டால் முன்னைப் போல தீவிரமாக முனைப்புடன் அமுதல்படுத்த முடியுமா?**

பாட்டிலுக்குள் இருந்த பூதத்தை வெளியேற அனு மதித்தது கலைஞருக் குச் சுலபம்; மறுபடி உள்ளே அடைப்பது ரொம்ப கஷ்டம்தான். அதற்காக அரக்கனுக்கு அடிபணிவதா? முயன்றுதான் பார்க்க வேண்டும்.


* குறுக்கிட்டும் கட்டப்பஞ்சாயத்து!

## சென்ட்டிமெண்ட்



# எமகண்டத்தில் மேரேஜ்!

ஆடி மாசத்தில பெரும்பாலும் திருமணத்தை நடத்த மாட்டாங்க. ஆனால், என் திருமணம் ஆடி மாதத்தில்தான் நடந்தது. அதுவும் செவ்வாய்க்கிழமை. அதைவிட முக்கியமான விஷயம் எமகண்டத்தில். இது நடந்தது 1970-ல்.

மூடநம்பிக்கையான ஆடி சென்டிமெண்ட் எனக்கில்லை. என் பிள்ளைகளின் பெயர் சாண்டில்யன், குறிஞ்சிமலர், ஜெயகாந்தன் இப்படித்தான்... எழுத்தாளர்களின் பெயர்களும், கதைகளும், கதாநாயகர்களையும் பெயராகச் சூட்டும் சென்டிமெண்ட் உண்டு. அதுவும் அந்த எழுத்துக் கலைஞர்களைக் கௌரவப்படுத்தும் நம்பிக்கையில் தானே தவிர, எனக்கு நன்மை தரும் நம்பிக்கையில் அல்ல.

(ஒருவேளை சென்டிமெண்ட்டை நிராகரிப்பதும் ஒரு சென்டிமெண்ட்டோ?)

- பாக்ஸர்.செல்வராஜ்,
பழையஆடுதொட்டி.

நான் என் குடும்பத்துடன் திருமணம் போன்ற நிகழ்ச்சிகளுக்குச் சென்று விட்டு, வீட்டிற்கு வந்ததும் இரவு மகன், மருமகள், பேரன், பேத்தி எல்லோரையும் உட்கார வைத்து உப்பு சுற்றிப் போடுவேன்.

பேத்தியையோ, பேரனையோ யாராவது புகழ்ந்துவிட்டால் உப்புக்குப் பதிலாக கற்பூரம் ஏற்றி திருஷ்டி கழித்து வாசலில் கொட்டுவேன். கண் திருஷ்டியை கலைப்பது என் பழக்கம்.

- சுகந்தா சுப்பிரமணியன்,
சென்னை-15



வாசகர்களே!
உங்களோட சென்டிமெண்ட்! குடும்ப நம்பிக்கைகள் என்ன? எழுதுங்க... kalkiweekly.com -க்கும் kalki@kalkiweekly.com அனுப்புங்க.

# அமைச்சர் குப்பு அவர்களே!

முகத்தின் முக்கால் பாகத்தை மப்ளரால் மூடிக்கிட்டு, கொள்ளைக்கூட்ட பாஸ் மாதிரி இருந்தவர் அந்த கால் டாக்ஸியை ஓட்டினார். ஒருகால் நம்மளைக் கடத்திடுவானோன்னு நான் உள்ளே பயத்தின் இருக்கையில் உட்கார்ந்திருந்தேன். என் பயத்தைப் போக்க நான் டிரைவரிடம் பேச்சை முடிச்சவிழ்ப்பது போல் அவிழ்த்தேன். ''ஸாரே உங்க பேரு?''

''...ம்ம் பேரு வெச்சு அறுபது வருஷம் ஆயிப் போச்சி. இன்னும் எப்படி ஞாபகத்திலிருக்கும்?'' என்றார். ஐய்யோ எடக்கு முடக்கா பேசுறானேன்னு உதறல் வந்தது. 'எங்கே போகணும்?'ன்னு கேட்க, அசோக்நகர் என்றேன். 'அசோக்நகர்ல எங்கேம்மா?' என்றார் 'சுள்'ளென்று. இரவும் குளிரும் எரிச்சலாய் அவர்மீது போர்த்தியிருந்தது. 'அசோக் நகர் போங்க சொல்றேன்'னு சொன்னேன். அசோக்நகர் வந்தது. 'இதெல்லாம் அசோக் நகர்தான். இப்போ சொல்லு எங்க போவணும்?' என்றார். சத்யமா எனக்கு வீட்டு அட்ரஸ் தெரியலை. வீட்டுக்குப் போற வழியும் தெரியாதுங்கிற நெசத்தை எப்படிச் சொல்றது? சொன்னா இவன் பணத்துக்காகக் கடத்திடுவானோ? 'டக்'கென்று 'நடிகை ஊர்வசி வீட்டுத் தெருவுக்குப் போங்க' என்றேன். 'இத மொதல்ல சொல்லியிருந்தா இப்படி ஊர் சுத்தியிருக்க வேண்டியதில்ல' என்றபடி வண்டியை வேறு திசைக்கு மாற்றினார். ஒண்ணு கன்பர்ம்டு... நான் ஊர்வசி என்று அந்த மனுஷனுக்கு அடையாளம் தெரியலை. வேறொருத்தியா இருந்தா வண்டியில் இருக்கிறது ஊர்வசிதான்னு தெரியாம நீ எப்படி மெட்ராஸில டிரைவராக வாழலாம்னு சண்டை போட்டுருப்பா. எனக்கோ ரொம்ப சந்தோஷம்.

வண்டி ஊர்வசி தெருவுக்குப் போனது. 'இதுதான் ஊர்வசி இருக்கிற தெரு, இங்க எங்கே?' என்றார். 'ஊர்வசி வீட்டு வாசல்ல நிறுத்துங்க' என்றேன். 'அவங்க வீட்டு வாசலாண்டை ஏன் நிறுத்தணும்? அந்த வூட்டுக்கு அந்தப் பக்கமா இந்தப் பக்கமா' என்றார் கோபமாக.

'என்னை அந்த வீட்டு வாசல்ல இறக்கி விடுங்க, அது போதும்'னு சொன்னேன். 'ஏம்மா அவங்க வீட்டு வாசல்ல நிறுத்துனா வாட்ச்மேன் இருப்பான். நாய் இருக்கும்'னார். கூடவே, 'வீட்டை விட்டு ஓடியாந்திட்டாயா? லவ்வு கிவ்வுன்னு பிரச்னையா?' என்றபடி 'நடிகை ஊர்வசி' வீட்டு வாசலில் காரை நிறுத்த..

ஊர்வசியாகிய நான் என் வீட்டைக் கண்டு பிடித்து உள்ளே போனேன்! அந்த டிரைவர் 'பே'ன்னு விழித்தபடி இருந்தார். ஒருமுறை ஒரு பெரிய கவிஞர் ஒரு பேட்டியில் சொல்லியிருந்தார். கார் கதவருகே நின்றபடி நடிகர் அசோகன் அந்தக் கவிஞரிடம் கேட்டாராம். 'ஒரு உதவி வேணும், டிரைவரைக் காணோம். ரொம்ப போர் அடிக்குது, இந்த டிரான்ஸிஸ்டரில் பாட்டுக் கேட்க டியூன் செஞ்சி தர முடியுமா'ன்னு. அவ்வளவு பெரிய நடிகருக்கு ரேடியோவிலே பாட்டுக் கேட்கத் தெரியலையேன்னு கேட்கக்கூடாது. தான் உண்டு தன் வேலை உண்டுன்னு போய்க்கிட்டு இருக்கிறவங்க சின்னச் சின்ன விஷயங்களை இப்படித்தான் தெரியாம விட்டுடுறாங்க. அப்படித்தான் நானும் என் வீட்டுக்கே வழி தெரிஞ்சுக்காம, கார்ல ஏறி கனவு கண்டுக்கிட்டே காலத்தை ஓட்டிட்டேன்!

ஆனால் என்னோட பிரண்ட் குப்பு அப்படியில்லை. நான் வீடு கட்டிக்கிட்டு இருக்கும் போது வீட்டுக்குள் வந்தாள் குப்பு. 'ஏய் பொடி என்னடி வுட் வொர்க் சரியா இல்லையே', 'ஏம்பா ஏன் இதுக்கு பட்டி சரியாப் பார்க்கலை?', 'இது என்ன மெயின் கேட்ல கிராக் வெல்டிங்? ஒழுங்கா பண்ணுங்க', 'ஏம்பா மீசை ஸார், அந்தக் கிராக்குல இந்தப் 'பட்டி'யப் போட்டு மூடிடாதீங்க' என்றாள். காண்டிராக்டர் மொறைச்சார். அவளுக்கு அதைப் பத்தியெல்லாம் கவலையில்லை. நான் கூலி கொடுக்கிறேன். நீ வேலை செய்யுறே. உன் வேலையை நீ ஒழுங்காச் செய்யணும். என் ப்ரண்ட்டை நீங்க ஏமாத்தக் கூடாது. அவ்வளவுதான் அவள் லாஜிக். இதை என்னிடம் சொல்லாமல், வேலையாட்கள் மனசு கஷ்டப்படுமேன்னு நினைக்காமல் தேங்காய் உடைப்பது போல் அந்த எடத்திலேயே பட்டுன்னு பளீர்ன்னு உடைச்சுப் பேசுவது அவளோட பாணி. அதுதான் அவள் பலம்-பலவீனம். வேறொரு மாநிலத்து



பெண்ணாயிருந்தாலும் ஒரு தமிழனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு தமிழ்நாட்டுல வேரூன்றி தமிழ்க் குழந்தைகளுக்கு தாயா இருந்து, தமிழில் பேசி, தமிழச்சியா டிரஸ் பண்ணிக்கிட்டு, (எந்த தமிழ் நடிகை தலை வகிடு நெடுக்க குங்குமத்தை தடவிக்கிறா? அந்த காஸ்ட்யூமே போதும் அவ உணர்வைச் சொல்ல) தமிழர்களுக்கான கட்சியில அவள் இப்போ சேர்ந்திருக்கா. எனக்கு எப்போவோ தெரியும் - அவ அமைச்சராயிடுவான்னு. ஒண்ணு சொல்ல மறந்துட்டேன். நான் வீட்டுக்குக் கடைசிப் பொண்ணு. அதனால என்னைப் பொடி (பொடிசு)ன்னு கூப்புடுவாங்க. நான் குஷ்புவை குப்புன்னுதான் கூப்பிடுவேன். நீங்க வேணும்னா பாருங்க அமைச்சர் குஷ்பூ அவர்களே!ன்னு போஸ்டர் அடிக்கிற காலம் ரொம்ப தூரத்தில் இல்லை. அவளை மாதிரியே எனக்கும் லட்சியம், ஆசை உண்டு. அது நான் சிறந்த டைரக்டரா ஆகணும் என்பதுதான். ஒரு நடிகைக்கு உரிய எந்த லட்சணமும் இல்லாம நடிகையானவள்தான் நான். கூட்டத்தைப் பார்த்துப் பயந்து அழுது மயங்கி விழுந்த காலம் உண்டு. என்னை டைரக்ட் பண்ணின முதல் ஆள் டான்ஸ் டீச்சர்தான். எல்லாரையும் விட பெரிய டைரக்டர் கடவுள்தான். பிரபஞ்சத்தை ஆக்ட் பண்ண வெச்சிக்கிட்டு இருக்கிறாரே!




**நா**ன் ஆடினதை விட எனக்குச் சொல்லிக் கொடுக்க சியாமளா டீச்சர் என் வீட்டுல ஆடினதே அதிகம். நாலு ஸ்டெப் கத்துக்கிட்டு மேடையில நிப்பேன். அந்தத் திரையைத் தூக்கினதும் கூட்டம் 'ஓ'ன்னு கையைத் தட்டும், நான் 'ஐயோ'ன்னு மயங்கி விழுவேன். தண்ணி தெளிச்சு என்னைத் தூக்கிட்டுப் போவாங்க. டான்ஸ் மேடை டிராமா மேடையாப் போயிடும். அப்படிப்பட்ட நான், அவுட்டோர் ஷூட்டிங்கில் நூற்றுக் கணக்கானவர் முன்னிலையில் நடிக்க வந்ததை என்னன்னு சொல்ல? பிறக்கப் போற ஒரு மாத்தினுடைய வாழ்க்கை பூவிலேயே எழுதப்பட்டு விடுவதைப் போல என் நடிப்புக்கான, வாழ்க்கைக்கான எல்லா வாய்ப்பாடுகளும் அப்பாவோட நாடகக் கொட்டகையிலேயே எனக்குள்ளே எழுதப்பட்டுடுச்சு. அப்போ 'ஜோ'ன்னு மழை பெய்யும். அந்த மழையைத்தான் இப்போ நான் டைரக்ட் பண்ணப் போறேன். மழை ஆணா பெண்ணா? மழை ஒவ்வொருத்தருக்குள் போடும் வேடங்கள்தான் என்ன?

கிச்சுகிச்சு மூட்டி சிரிக்க வைப்பான்னு பார்த்தா, சீரியஸாப் போறாளே ஊர்வசின்னு நீங்க நெனைக்கிறது தெரியுது. சிரிப்பை முழுசா ருசிக்க கொஞ்சம் சீரியஸா இருந்தாத்தான் முடியும். மழை எனக்கும் கத்துத் தந்தது.

**(தொடரும்)**

# எஃஸி போட்டி சில்க் சாரி!



## மாதம் 3 புடைவைகள் பரிசு!

***வாசகர்களே!***

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவை பரிசு பெறுவார்கள். **தொடரின் இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

ஆகஸ்ட் மாத கூப்பன்களை இணைத்து அனுப்ப கடைசித் தேதி : 06.09.10

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**
கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

.....................பின்கோடு:.................

தொலைபேசி : ..............................

இ-மெயில் : ..............................

ஆகஸ்ட் -15

**ஊர்வசியின் செல்லப் பெயர் என்ன?**

*விடையை டிக் செய்யவும்*

- ☐ மடி
- ☐ குப்பு
- ☐ பொடி
- ☐ சுக்குப்பொடி



# கல்கி



2010 ஆகஸ்ட் 15
விக்ருதி ஆடி 30
மலர் : 69
இதழ் : 3

**தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா** - *பாரதியார்*

## காஷ்மீர் மக்களிடம் கருத்து கேளுங்கள்!

"சட்டம் ஒழுங்கைச் செயல்பட விடுங்கள்; நீதியை நீங்களே நிலைநாட்ட முயற்சி செய்யாதீர்கள்!" - காஷ்மீர் மக்களை நோக்கி ஓமார் அப்துல்லா இவ்வாறு கெஞ்சுவதைக் காண பரிதாபமாக இருக்கிறது! அவரது ஆட்சியில் நிர்வாகம் பிரமாதமாகச் செயல்படாது இருந்திருக்கலாம்; ஆனால், காஷ்மீரில் இன்று நிலவும் சூழலுக்கும் அதன் பின்னணியிலான காரணங்களுக்கும் ஓமார் அப்துல்லா மட்டுமே பொறுப்பல்ல!

வரலாற்றுரீதியாக காஷ்மீரில் என்னென்ன நடந்தது, அது யார் செய்த தவறு என்று ஆராய்வதற்கான தருணம் அல்ல இது. மக்களின் இன்றைய கொந்தளிப்பு, அங்கு காவல் துறையும் மத்திய ரிசர்வ் போலீசும் செலுத்தும் ஆதிக்கத்துக்கு எதிராகத்தான். இந்த ஆதிக்கம் இல்லாமல் காஷ்மீரில் அமைதியும் சகஜ வாழ்வும் நிலவ வேண்டுமானால் என்ன தேவை...? மக்களின் ஒத்துழைப்பு தேவை. அவர்கள் ஏன் ஒத்துழைக்கவில்லை...? இதைக் கண்டறிந்து, அவர்களது குறைகளை நிவர்த்தி செய்ய மத்திய-மாநில அரசுகள் உடனடியாக முயற்சி செய்யவேண்டும். நிபந்தனைகள் விதிக்காமல் முதலில் இளைஞர் அமைப்புகளை அழைத்துப் பேசுவது நல்லது. வன்முறைக்கு முதலில் பலியாவோர் இளைஞர்களே; விடுதலை அல்லது வன்முறை அமைப்புகளின்

காமன்வெல்த் போட்டிகள்
லஞ்ச ஊழல்
என்னை யாருமே மீட் பண்ண முடியாது!




மூளைச் சலவைக்கு மிக அதிகமாக உட்படுபவர்களும் இளைஞர்களே!

ஐ.நா.சபையின் தலைமைச் செயலர், காஷ்மீர் நிலைமை கவலை தருவதாகக் கூறுவதை மறுப்பதில் அர்த்தமில்லை. திரும்பத் திரும்ப பாகிஸ்தான் மீது பழி சுமத்துவதிலும் காலம் கடத்துவதிலும்கூட அர்த்தமில்லை. சுதந்திரம் விரும்புவோர், பாகிஸ்தான் ஆதரவாளர்கள், இந்தியாவையே நம்புவோர் என்று காஷ்மீரில் பலதரப்பட்டவர்கள் இருக்கிறார்கள். பெரும்பான்மை மக்களின் கருத்து என்ன என்பது அறியப்பட வேண்டும்.

காஷ்மீரில் வாழ்ந்த பண்டிட்டுகள் தங்கள் வாழ்விடம் பறிக்கப்பட்டு வேறிடத்துக்கு (குறிப்பாக புதுதில்லி) இடம்பெயர நேர்ந்துள்ளது துரதிர்ஷ்டமே. ஆனால், இன்று அம்மாநிலத்துக்குத் திரும்பச் சென்று குடியேற அவர்களே விரும்பமாட்டார்கள்! அந்த அளவுக்கு அங்கே நிலைமை சீரழிந்துவிட்டது.

பாகிஸ்தானோ, இதுதான் சாக்கு என்று காஷ்மீரில் நிகழும் இந்திய ஒடுக்குமுறையைக் கண்டனம் செய்கிறது! உலகின் கவனத்தையே ஈர்க்கும் அளவுக்கு இப்பிரச்னை சென்றுவிட்டது. ராணுவத்தையோ சிறப்பு போலீஸ் படையையோ கொண்டு தற்காலிக மாகக் கலவரங்களை ஒடுக்கலாம்; ஆனால் அவை முன்னெப்போதும்போல் மீண்டும் வெடிக்கும்!

நீண்டகால நோக்கில், உலகறிய காஷ்மீர் மக்களிடையே கருத்துக் கேட்பு நிகழ்த்துவதும் அதன் அடிப்படையில் முடிவெடுப்பதும்தான் அறிவுடைமை. பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வும் அதுவே. ●

மின்னல் கதை

# கலிகாலம்



"அண்ணா, நாங்க குரூப் ஸ்டடி பண்ணுறோம்! ஃபர்ஸ்ட் மார்க் எடுக்கணும்னு நினைக்கிறோம்!'' என்றாள் அவள்.

''நான் உனக்காக வேண்டிக்கிட்டு கோயிலுக்குதாம்மா வந்திருக்கேன்! படிச்சி முடிச்சிட்டு வீட்டுக்குப் பத்திரமா போம்மா!'' என்றான் அவன்.

அவனும் அவளும் செல்ஃபோனை சுவிட்ச் ஆஃப் செய்தனர், ஆளுக்கொரு சினிமா தியேட்டரில் அமர்ந்தபடியே!

– பா.பனிமலர், மதுரை



''ரேடியோல மழை வரும்னு சொன்னாங்க...''

''நீங்க கேட்டிங்களா?''

''நான் கேட்கலை, அவங்களேதான் சொன்னாங்க.''

– வி.சாரதிடேச்சு





''தாத்தாவுக்குப் பாட்டி மேல மரியாதையும் எப்பலேர்ந்து அன்பும் வந்தது?''

''பாட்டி இறந்ததுலேர்ந்து!''

– தஞ்சை சுபா

ப த்து மணி வெயில் சுள்ளென உறுத்தியது. க்யூ நகராமல் அப்படியே இருக்க, நடு நடுவே கத்தை, கத்தையாய் பேப்பர்கள் மட்டும் ஜன்னல் வழியாய் உள்ளேயும், வெளியேயும் வந்த வண்ணம் இருக்கத்தான் செய்தன. என் காருக்கு கேஸ்கிட் மாட்டியதால், அதற்கு ஆர்.சி புக்கில் எண்டார்ஸ்மென்ட் செய்ய வந்திருந்தேன். அதைத் தான் டீலரே செய்து கொடுத்துடுவானே என்றுதானே கேட்கிறீர்கள்? எல்லோரும் இதையே தான் கேட்கிறார்கள். அவனிடம் கொடுத்தால், கேஸ்கிட் விலையில்லாமல் இரண்டாயிரம் கேட்டான். எனக்கு சுர்ரெனக் கோபம் வந்தது. ர

''இது கவர்மெண்ட் ஆத்தரைஸ்ட் கிட் தானே?''

''ஆமாம் சார்.. ஆனா..''

# எண்டார்ஸ்மெண்ட்

''நான் கேட்கறதுக்கு மட்டும் பதில் சொல்லுங்க.. எனக்கு தெரிஞ்சு 150 ரூபாயோ, 200 ரூபாயோ தானே ஃபீஸ்''? எதுக்கு ரெண்டாயிரம்? பகல் கொள்ளையா இல்லை இருக்கு?''

''அதெல்லாம் கேட்க முடியாது சார். இல்லாட்டி எண்டார்ஸ்மென்ட் வாங்க முடியாது சார்'' என்றதும், என் கோபம் இன்னமும் அதிகமாகி நானே வாங்கிக்கிறேன், என்னால லஞ்சத்தைப் பொறுத்துக்க முடியாது என்று வீராப்பு பேசியதால் தான் பத்து மணி வெயிலில் நின்றிருப்பது. கையில் இருக்கும் பேப்பர்களை எடுத்துக் கொண்டு, கடைக்கு வெளியே விற்கப் படும் அதற்கான விண்ணப்பப் படிவங்களை எல்லாம் அவனிடமே ஒரு பத்து ரூபாய் கொடுத்து எனக்கு அளித்திருந்த விபரங்களை எல்லாம் சரி பார்த்து, அந்தந்த விண்ணப்பங்களுக்குச் சரியான படிவங்களை இணைத்திருந்தேன்.

''இதையெல்லாம் எடுத்துட்டு மேலே செகண்ட் ஃப்ளோர் போனிங்கன்னா தபால் செக்ஷன் இருக்கு! அங்க போய் கேட்டீங்கன்னா சொல்வாங்க.. நீங்க எதுக்கு சார் அலையிறீங்க. கம்பெனிகாரன் கிட்ட கொடுத்தா தானா நடக்கப் போவுது'' என்றவனை கோபமாய்ப் பார்த்துவிட்டு, பதிலேதும் சொல்லாமல் படியேறினேன். லஞ்சத்தை எவ்வளவு சாதாரணமாய் எடுத்துக் கொள்கிறார்கள். ஊறி விட்டது. நேராக தபால் என்றெழுதியிருந்த பகுதிக்குச் சென்று கையில் இருந்த கத்தையைக் கொடுத்ததும், வாங்கி பார்த்துவிட்டு,

''சார்.. இது பி செக்ஷன் சூப்ரண்ட்கிட்ட கையெழுத்து வாங்கணும். நீங்க ஏன் சார் அலையிறீங்க. உங்க ஆள் இல்லை. அவனே கிட் போட்டுட்டு வாங்கி கொடுத்திருவானே?'' என்றவனுக்கு எந்தவிதமான பதிலும் சொல்லாமல், ''பி செக்ஷனுக்கு எப்படிப் போகணும்?' என்று கேட்டேன். அவன் அடுத்த பேப்பரை வாங்கியபடியே வலது பக்கம் கை காட்டினான். அவனின் வலது பக்கத்தை காட்டினானா? இல்லை அதற்கு பின்னாலா என்று யோசித்தபடி மேலே பார்த்துக்கொண்டே போய் பி செக்ஷனைக் கண்டுபிடித்து சூப்ரண்ட் முன்னாடி நின்றதும், முகம் தூக்காமல் அந்தப் பெண்மணி ''எல்லாத்தியும் கரெட்டா அடுக்கி ஆர்டரா

கொடு. உனக்கு தெரியாதா?'' என்றதும், ஏற்கெனவே இருந்த எரிச்சல் எல்லாம் சேர்ந்து,

''என்ன நினைச்சிட்டிருக்கீங்க? நான் என்ன உங்க ப்ரோக்கரா..? அடுக்கிக் கொடுக்கிறதுக்கு? எல்லா பேப்பரும் இருக்கு. பார்த்து ஆர்டர் பண்ணி செய்ய வேண்டியது உங்க வேலை. முடியாதுன்னா சொல்லுங்க... ரிட்டர்ன்ல எழுதித்தாங்க... எங்க பார்க்கணுமோ அங்க பார்த்துக் கிறேன்'' என்றதும் நிமிர்ந்த பெண்மணி யின் கழுத்தில் குறைந்தது ஐம்பது பவுனாவது இருக்கும். காதில் இருந்த தோட்டிலிருந்து ஒரு லைன் தங்க லிங்கை முடியில் மாட்டியிருந்தது அவளது வயதிற்கு ஓவராகவே இருந் தது.

''ஏன் சார், டென்ஷனாகுறீங்க. உங்க ஆள் கிட்ட கொடுக்க வேண்டியதுதானே?'' என்றவளிடம், ''அதான் கொள்ளை யடிக்கிறீங்களே. 200 ரூபாய் ஃபீஸுக்கு 2000 ரூபாய் கேட்குறீங்க. லஞ்சம் இல்லாம எதுவும் செய்ய மாட்டீங்களோ'' என்று மூச்சு வாங்க கத்தி யதும், எதுவும் பேசாமல் அவளே எல்லா ஃபைல் களையும் வரிசைப்



சங்கர் நாராயண்



# ஆடி இலவசம்!

"எங்க டாக்டருக்கு இதுதான் முதல் ஆபரேஷன்!"

"அதுக்காக ஆபரேஷன் கத்தியில எலுமிச்சம் பழத்தை குத்தி வச்சிருக்கிறது நல்லாவா இருக்கு!"

- எஸ். முகம்மது யூசுப்

"அந்த டாக்டர்கிட்ட ஏன் கூட்டம் அவ்வளவு போகுது?"

"நோயாளி ஒருத்தர கூட்டிட்டு வந்தா கூட்டி வந்தவருக்கு சிகிச்சை 'ஆடி இலவசம்'னு போர்டு போட்டிருக்காரே!"

- பா.மனோகரன்

படுத்தி, அடுக்கி வைத்து அவள் கையெழுத்திடும் இடத்தில் எல்லாம் கையெழுத்திடும் போது எரிச்சலாய்த் தான் இருந்தாள்.

"போய் தபால்ல கொடுத்துட்டு ஃபீஸ் கட்டிட்டுப் போங்க. மத்யானம் இன்ஸ்பெக்டர் வந்து செக் பண்ணிட்டுச் சொல்வாரு" என்றாள். அவள் சொல்வாரு என்று சொன்னதில் ஏதோ அழுத்தம் இருப்பதாகவே பட்டது. ஆனானப்பட்ட சூப்பிரண்டே மிரண்டு போய் விட்டாள்! இன்ஸ்பெக்டர் எல்லாம் எம்மாத்திரம் என்று மனம் சந்தோசப்பட்ட அடுத்த சில அற்ப கணங்களிலே, இன்ஸ்பெக்டர் வடிவத்தில் தெரிந்தது. இன்ஸ்பெக்டர் வண்டியில் பிட் செய்திருந்த கிட்டைப் பார்த்துவிட்டு ஆங்காங்கே கையில் நான் கொடுத்திருந்த பேப்பரில் மார்க் செய்து டிக் செய்துவிட்டு "மேல... ரூமுக்கு வாங்க... ரிசல்ட் சொல்றேன்" என்று அடுத்த வண்டியை பார்க்கப் போனார்.

எனக்குக் கொஞ்சம் ஆயாசமாய் இருந்தது. இருந்தாலும் லஞ்சத்தை நாமே வளர்க்கக் கூடாது என்ற வைராக்கியம் என்னுள் ஏற, காத்திருந்தேன். உறுத்தலே இல்லாமல் லஞ்சம் கொடுப்பதும், வாங்குவதும் கடமை போல அல்லவா இருக்கிறார்கள். ப்ரோக்கர்களை ஊக்குவித்து விட்டு நாமே புலம்புவது நம் தவறு தானே? என்றெல்லாம் யோசித்துக் கொண்டிருந்த வேளையில், இன்ஸ்பெக்டர் ரூமுக்குள்ளிருந்து வெளியே வந்து "என்ன சார். உங்க ஆள் வரலையா?" என்றார்.

எனக்கு இந்தக் கேள்வியைக் கேட்டு, கேட்டுப் புளித்துப் போய்விட்டது. இப்போது எனக்குக் கோபம் வரவில்லை. நிதானமாய் நிமிர்ந்து பார்த்து "இல்லை சார். அவன் இரண்டாயிரம் ரூபாய் கேட்டான். இருநூறு ரூபாய்க்கு என்ன அநியாயம்னு நானே வாங்கிக்கிறேன்னு

வந்திட்டேன்'' என்றேன்.

இன்ஸ்பெக்டர் ஏதும் சொல்லாமல் ''உங்களது ரிஜெக்ட் ஆயிருச்சு சார். கரெக்ட் பேப்பர்ஸ் எல்லாம் மிஸ்ஸிங். நீங்க அவனை வரச்சொல்லுங்க...'' என்றார்.

''இல்லையே... நான் எல்லா பேப்பரையும் செக் பண்ணித்தானே லிஸ்ட் போட்டு வச்சிருந்தேன்.''

''இல்ல சார், எங்க ஸ்பெசிஃபிகேஷனுக்கு ஏத்த மாதிரி ஃபயர் வால்வ் சரியா இல்லை...'' என்று இழுத்தான். எனக்குப் புரிந்துவிட்டது. லஞ்சம் கொடுக்காததனால் இவன் வேலையைக் காட்டுகிறான் என்று. இவனுக்கு நான் யார் என்று காட்டுகிறேன் என்று முடிவெடுத்துவிட்டு, ''அப்படின்னா.. நீங்க தானே அவனுக்கு கவர்மெண்ட் மற்றும் ஆர்.டி.ஓ சர்டிபை பண்ணின கிட்டுன்னு சர்ட்டிஃபிகேட் பண்ணியிருக்கீங்க..? அதுல மிஸ்டேக்குன்னா.. அப்ப அது உங்க மிஸ்டேக் தானே...? அப்படி ஒரு வேளை உங்க ஸ்பெசிஃபிகேஷனுக்குச் சரியா போடலைனா, அவன் எதை போடலை, அதுல என்ன பிரச்னைன்னு சொல்லி அவனோட சர்டிஃபிகேட்டை கேன்ஸல் பண்ண வேண்டியதுதானே?''

''இத பாருங்க சார். அதெல்லாம் என் வேலையில்லை. ஆர்.டி.ஓ தான் செய்யணும். எனக்கு ஸ்பெசிஃபிகேஷனுக்கு ஏத்தாப்பல இல்ல. அவ்வளவுதான்.''

''அப்ப நான் இரண்டாயிரம் ரூபா கொடுத்தா சரியாயிடுமா..?

''இதப்பாருங்க சார்... படிச்சவங்களா இருக்கீங்க... நீங்க காசு கொடுத்தாக்கூட உங்களுக்கு எண்டாஸ்மெண்ட் வாங்க முடியாது சார். ரூல்ஸ் ஒத்துக்காது. மேல பேசணுமின்னா.. ஆர்.டி.ஓ கிட்ட பேசிக்கங்க...'' என்று போய்விட, நான் ஆர்.டி.ஓ. பி.ஏ.விடம் அவரை பார்க்கணும் என்றதும், வெளியே காக்க வைத்துவிட்டு அவர் உள்ளே போனார். 'வரச் சொல்லுங்க' என்றதும் உள்ளே சென்றேன். போன் அடித்தது. எடுத்துப் பேசியவர் வெறும் ம்..ம்..ம்ம் என்று மட்டுமே 'ம்' கொட்டிவிட்டு, ''ஏன்

## அம்மாக்கள் ஆட்சி...

பிதாமகனில் வெகுளியாகக் கலக்கிய லைலாவுக்கு இப்போது இரண்டு ஆண் குழந்தைகள். 'நடிக்கலாமே அம்மணி?' என்றால் 'குடும்பம் குழந்தைகளை விட நடிப்பு முக்கியமா? நிம்மதியா வாழக் கத்துக்கணும்' என்கிறார் விவரமா. மீனாவும் அம்மாவாகப் போகிறார். மாளவிகா இரண்டாவது குழந்தைக்கு அம்மா ஆகிறார். 'வெள்ளித்திரையில் கொஞ்சம் இடைவெளி விட்டு மீண்டும் ஃப்ரெஷ்ஷாக ரீ என்ட்ரி ஆவேன்' என்கிறார் அம்மா மாளவிகா. இனி அம்மாக்கள் ஆட்சிதான்.

– கோலிவுட்டிலிருந்து 'சீன்' கோபால்

நீங்க அலைஞ்சுகிட்டு, உங்க ஆள் வரன்ல...?'' என்றார். எனக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் விரக்தியாய் அவரைப் பார்த்தேன்.

''சாரி சார்... சின்ன மீட்டிங், அர்ஜெண்ட். மினிஸ்டர் பி.ஏ.வோட. ஒரு மத்யானம் மூணு மணிக்கு வந்திடுங் களேன்'' என்று ஆர்.டி.ஓ. சொன்னவுடன்,



''பெரியவங்ககிட்டே எது கேட்டாலும் மரியாதையா கேட்கணும்.''

''அப்பா, மரியாதையா கிரிக்கெட் பேட் வாங்கிக் குடு.''

- வி.ஜி.சத்தியநாராயணன்

இத்தனை நேரம் என்னை அலைக்கழித்தது எல்லாம் என்னுள் கோபமாய் மாறி வெடிக்க, ''என்ன சார் நினைச்சிட்டிரு கீங்க.. லஞ்சம் கொடுத்தாத்தான் செய் வீங்களா? இதுக்கு நீங்களும் உடந்தையா இருக்கீங்க. இப்போ சொல்றேன் சார். நானுமொரு கவர்மெண்ட் சர்வீஸ் ஆள்தான். இதுவரைக்கும் ஒத்த பைசா லஞ்சம் கொடுக்காம, வாங்காம இருந்து வந்திருக்கேன். இனிமேயும் கொடுக்கறதா இல்ல. கவர்மெண்ட் ஆத்தரைஸ்டுன்னு தான் எட்டாயிரம் செலவு செஞ்சி இந்தக் கிட்டை போட்டிருக்கேன். இல்லைன்னா மூவாயிரம்தான். இனிமே உங்க எண்டார்ஸ்மெண்ட் எனக்கு வேண்டாம். உங்களால என்ன செய்ய முடியுமோ அதச் செய்யுங்க.. நான் நேரே போலீஸ் ஸ்டே சன்ல போய் ஒரு கம்ப்ளெயிண்ட் கொடுக் கப்போறேன். ஆத்தரைஸ்டு கிட் போட றேன்னு கம்பெனிக்காரனும், ஆர்.டி. ஓ.வும் சேர்ந்து என்னை ஏமாத்துறாங் கன்னு... அதுக்கு அப்புறம் நடக்குறது நடக்கட்டும். நான் வர்றேன்'' என்று விருட்டென்று அவரது ரூமிலிருந்து வெளி யேறி விடு விடுவென ஆபீஸின் வெளியே வந்து கொஞ்சம் ஆசுவாசப் படுத்திக் கொள்வதற்காக நின்ற போது, பின்னாடியே ஒருவன் வேகமாய் 'சார்...சார்..சார்' எனக் கத்திக் கொண்டே ஓடி வந்தான் கையில் என் ஆர்.சி. புக்குடன். அப்போது தான் எனக்கு உறைத்தது, ஒரிஜினல் ஆர்.சி. புக்கை அங்கேயே கோபத்தில் விட்டு வந்துவிட்டேன் என்று.

பதற்றத்துடன் வந்தவனிடமிருந்த நன்றி சொல்லி அதை வாங்கினேன். அவன் அங்கேயே நின்று கொண்டிருந்தான். எடுத்து வந்ததற்கு ஏதாவது கேட்கிறானோ என்று யோசித்துப் பையில் கைவிட்டதும் அவன் அதிர்ந்து அலறி.. ''அய்யய்யோ.. சார் ஏதுவும் வேணாம். உங்க ஆர்.சி.புக் எண்டார்ஸ்மென்ட் ஆயிருச்சு. சும்மா பிச்சி உதறிட்டீங்க சார்..'' என்று என் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டு ஓடி னான். ஒரு பக்கம் சந்தோஷமாய் இருந் தாலும், ஒரு சாதாரண எண்டார்ஸ் மெண்டுக்கு இவ்வளவு போராட்டமா என்ற ஆயாசம் மன அழுத்தத்தைக் கொடுத்தது.

இது நடந்து இரண்டு வாரம் கழித்து என் தங்கையும் அவளின் காருக்கு கேஸ்கிட் போட்டுவிட்டு, எண்டார்ஸ் மென்ட் செய்ய, அந்த டீலர் அநியாயமாய் இரண்டாயிரம் ரூபாய் கேட்பதாய்க் கூற ''பேசாம குடுத்துரு. நிம்மதியா வீட்டி லேர்ந்தே வேலை முடிஞ்சிரும்'' என்றேன்.




# பழைய கோயிலைத் தேடி...

மாதத்தில் ஒரு ஞாயிறு ஏதேனும் ஒரு பழைய கோயிலைத் தேடிச் செல்வது; அங்கே முறையாக வழிபாடு நடத்தி தேவாரமும் ஓதிவிட்டுத் திரும்புவது - பழந்திருக்கோயில்கள் வழிபாட்டு மன்றத்தின் முக்கியமான குறிக்கோள் இது தான். ஆயினும் பல கோயில்கள் மிகச் சிதிலமாக, புல்பூண்டு முளைத்திருக்கக் கண்டு, அவற்றைச் சுத்தம் செய்யவும் சீர்செய்யவும் ஊர் மக்கள், நல்லிதயங்களுடன் கூடி முயற்சிகள் செய்வதும் உண்டு.

இந்த மன்றம் நூறு முறை வழிபாடு நிகழ்த்தியதைக் கொண்டாட, கடந்த மாதம் குளத்தூரில் அமுதாம்பிகை உடனுறை சோமநாத ஈசுவரர் கோயிலில் இசை நிகழ்ச்சியும் சிறப்பு வழிபாடும் நடைபெற்றன. திருவாவடுதுறை, வேளாக்குறிச்சி ஆதீனங்கள் பங்கேற்று, ஆலய வழிபாட்டை அற்புதமாகச் செய்வித்து ஆசியுரை நிகழ்த்தினர்.

மன்றம் இதுவரை சென்று வழிபாடு நிகழ்த்திய கோயில்கள் பற்றிய விவரக் குறிப்புகள் தொகுக்கப்பட்டு அழகிய நூலாக வெளியிடப்பட்டது.

மன்றத் தலைவர் ராஜ் மோகன், வழிபாடு நிகழ்ந்த கோயில்களின் புகைப்படத் தொகுப்பைத் திரையிட்டு, போதிய பராமரிப்பு இன்றி பழம்பெரும் கோயில்கள் சிதிலமாகி வருவதைச் சுட்டிக்காட்டினார். உள்ளூர் மக்களின் ஈடுபாடுதான் ஆலயங்களைக் காப்பாற்ற முடியும் என்றவர், தங்கள் மன்றம் சென்று வழிபாடு நிகழ்த்திய பிறகு சில ஊர்களில் உள்ளூர் மக்கள் விழிப்புற்று கோயிலைப் பராமரிக்க ஆரம்பித்த செய்தியையும் பகிர்ந்துகொண்டார்.

மன்ற உறுப்பினர்கள் சென்னையைச் சேர்ந்தவர்கள் என்பதால், பெரும்பாலும் சென்னையைச் சுற்றியுள்ள பழைய கோயில்களுக்குத்தான் சென்று வருகின்றனர். பிற ஊர்களில் இதுபோன்ற மன்றங்கள் அமைக்க விரும்புவோருடன், தமது அனுபவங்களைப் பகிர்ந்து உதவ ராஜ் மோகன் தயாராயிருக்கிறார்.

மேற்கொண்டு விவரங்கள்: www.pazhanthirukoilgal.blogspot.com

சென்னை, பெசன்ட் நகரில் உள்ள ஸ்ரீ ரத்னகிரீஸ்வரர் ஆலயத்தில் ஸ்ரீ சம்பூர்ண சகஸ்ர சண்டி மஹா யக்ஞம் 1.8.2010 முதல் 12.08.2010 வரை நடைபெறுகிறது. தொடர்புக்கு: 044-2491 0405.



பல் சொத்தையானால், பிடுங்கி விடுவது சரியா? குழியை அடைத்துக் காப்பாற்றுவது சரியா?

- மதி, சென்னை

**பதில் அளிக்கிறார் டாக்டர் தீபப்ரியா, பல் மருத்துவர் :** பல் மூன்று அடுக்குகளால் ஆனது. இதில், பற்சிதைவு அல்லது பற்குழி 'எனாமலில்' ஏற்படும்போது, மருத்துவரிடம் காண்பித்துச் சுத்தம் செய்துவிட்டு, அடைத்துக் கொள்வதே போதுமானது.

எனாமலுக்கு அடுத்த அடுக்கான 'டெண்டினில்' கிருமித் தொற்றும், பற்சிதைவும் ஏற்பட்டு இருந்தால் உணவுகளை உட்கொள்ளும் போதும் பல் கூச்சமும், மிகக் கூர்மையான வலியும் வரும். பற்குழி, ஆழமாகவும், அகலமாகவும் இருக்கும் பட்சத்தில், உணவுத் துகள்கள் மாட்டிக்கொள்வதும் உண்டு. எனவே ஒரு எக்ஸ்ரே மூலம் பல்லைப் பரிசோதித்துவிட்டு, அதற்கேற்ப முதலில், தற்காலிகமாக, ஒரு மருந்துப் பொருள் மூலம் பல்லை அடைத்துவிட்டு, பல்லின் நரம்புகள் சரியான பின், அதாவது, 6 முதல் 8 வாரங்கள் கழித்து, நிரந்தரமாக, அடைத்துத் தீர்வு காணலாம்.

பல் அமைப்பு மிகவும் பாதிக்கப்பட்டிருப்பின், வெறுமனே அடைப்பதை விடவும், அந்தப் பல்லுக்கென்று பிரத்யேகமாக ஒரு கேப் அல்லது கவர் போடலாம்.

அடுத்த அடுக்கான, பற்கூழ் எனப்படும் பல்லின் ரத்தக் குழாய்களும், நரம்புகளும் உள்ள பகுதி பாதிக்கப்பட்டால், வீக்கம், சீழ் கட்டிக் கொள்ளுதல் போன்ற தொந்தரவுகள் ஏற்படும். இந்த நிலையிலும் கூட பல்லை எடுக்க வேண்டியதில்லை. பல்லின் வேர் ஆழம் வரை சென்று சுத்தப்படுத்தும் 'ரூட் கனால் தெரபி' எனப்படும் வேர் சிகிச்சை செய்து கொண்டால், வலியும் குறையும். உங்கள் பல் உங்களிடமே, உங்களுடனே பல்லாண்டு வாழும்.

# உங்களிடம் 'பல்'லாண்டு வாழும்





✱ டாக்டர் தீபப்ரியா

என் அப்பா மாரடைப்பால் இறந்துவிட்டார். எனது அண்ணனுக்கும் ஹார்ட் அட்டாக் வந்து சிகிச்சை எடுத்துக் கொண்டிருக்கின்றார்.

எனக்கு கடந்த ஆறு மாதங்களாக நெஞ்சுவலி ஏற்பட்டு இதுவரை பத்துக்கும் அதிகமான இதய நோய் நிபுணர்களை ஆலோசித்துவிட்டேன். இ.சி.ஜி./எக்கோ/ஆஞ்சியோகிராம் வரை எடுத்துவிட்டேன். சமீபத்தில் ஒரு டாக்டர் எனக்கு 100 சதவிகிதம் இதயம் நன்றாக இருப்பதாகவும், எதிர்காலத்தில்கூட ஹார்ட் அட்டாக் வர வாய்ப்பில்லை

உங்கள் சந்தேகங்களை 'கல்கி கிளினிக்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க
என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்வி,பெயர், ஊ

# கல்கி கிளினிக்



★ டாக்டர் ஆனந்தன்

எனவும் கூறி இனி எந்த டாக்டரையும் பார்க்கக் கூடாது எனச் சொன்னார். ஆனாலும் எனக்கு நெஞ்சு வலிக்கிறது. எனக்கு என்னப் பிரச்னை? என்னை சைக்கியாட்ரிஸ்ட்யிடம் போகச் சொல்லி நிறைய டாக்டர்கள் சொல்கிறார்களே?

- சுரேஷ், வேலூர்

**பதில் அளிக்கிறார் டாக்டர் ஆனந்தன், மனநல மருத்துவர் :** சுரேஷ்! நீங்கள் தினம் தினம் அனுபவிக்கும் கஷ்டங்கள் மிகவும் வேதனையான ஒன்று. உங்களின் உடல் உபாதைகள், நெஞ்சுவலி போன்றவை உங்கள் இடத்தில் இருந்து அனுபவித்து பார்த்தால்தான் தெரியும்.

கவலைப்படாதீர்கள் சுரேஷ்! உங்களுக்கு நெஞ்சுவலி இருப்பது உண்மை. கற்பனையல்ல. முன்பின் அனுபவமில்லாத ஒருவரைத் திடீரென மேடையில் பேசச் சொன்னால் நெஞ்சு படபடப்பு, வியர்வை, நடுக்கம், வயிறு கலக்கம், நாக்கு வறட்சி, நெஞ்சடைத்து பெருமூச்சு என ஏற்படுமல்லவா? ஆனால் இத்தகைய அறிகுறிகள் ஹார்ட் அட்டாக்கிலும் வரும் அல்லவா? இதில் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டியது (டாக்டர்களும்தான்) மேடையில் அவனுக்கு ஏற்பட்ட அறிகுறிகள் கற்பனை அல்ல. தேவையில்லாத குழப்பத்தால் ஏற்பட்டதல்ல. Hypothalamo-Pitutary - Adrenal Axis எனப்படும் ஹார்மோன் இணைப்பின் தூண்டுதலால் ஏற்பட்டதாகும். உங்கள் பிரச்னைக்கான அடிப்படை காரணம் hypothalamus எனப்படும் மூளையின் சிறுபகுதியில் ஆரம்பிக்கிறது. அதை சரி செய்தால்தான் நெஞ்சு வலி சரியாகும். முதலில் அதற்கு SSRI எனப்படும் ஒருவகையான மருந்துகளை உங்கள் குடும்ப மருத்துவர் அல்லது மனநல மருத்துவர் உதவியுடன் எடுத்துக் கொள்ளுங்கள். அதற்குபிறகு சைக்கோ தெரபி எடுத்துக் கொண்டால் பிரச்னை முழுவதும் சரியாகிவிடும்.

kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில், kacli ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

புற்றுக்கு வளைகாப்பு நடத்தி வைப்பதை, எங்கேனும் பார்த்திருக்கிறீர்களா? மஞ்சள், சந்தனக் காப்பு அணிவித்து, குங்குமம் பொட்டு வைத்து, பால், முட்டை வார்ப்பார்கள். ஆனால், நாமக்கல் மாவட்டம் மோகனூர் அருகே ராசிபாளையம் மாருதி நகரில், ராஜநாகலெட்சுமி அம்மன் கோயிலில் உள்ள புற்றுக்கு வளைகாப்பு நடக்கிறது.

ஊஞ்ச மரத்தடியில் இயல்பாக உருவாகியுள்ளது ஏழு அடி உயரப் புற்று. அதன் மையப் பகுதியில் முக உருவம் கொண்டு காட்சியருளி வருகிறாள் ராஜநாக லெட்சுமி அம்மன். சற்றுத் தள்ளி பால மரம். இரண்டும் இணைந்தது தான் ராஜநாகலெட்சுமி அம்மன் கோயில். இந்த இடத்தில் கோயில் உருவாகி, பத்து ஆண்டுகள் ஆகிறது. நாமக்கல், சேலம் மாவட்டப் பகுதிகளில் இக்கோயில் பிரபலம்.

ராஜநாகலெட்சுமி அம்மன் குடிகொண்டிருக்கும் புற்றுக்கு, ஆடி மாதத்தில் எந்த வெள்ளிக்கிழமையில் வளைகாப்பு நடத்துவதென்று குறி கேட்கப்படுகிறது. அம்மன் வாக்கு தரும்



குறிப்பிட்ட ஆடி வெள்ளியில் வளைகாப்பு நடத்தப்படுகிறது. ஆனி மாதத்தில் குறி கேட்கப்பட்டு, வளைகாப்பு தேதி குறிக்கப்பட்டு, அந்தத் தேதி நாமக்கல்-சேலம் மாவட்டப் பகுதிகளில் நோட்டீஸ் மற்றும் போஸ்டர்கள் வாயிலாகத் தெரியப்படுத்தப்படுகிறது.

குறிப்பிட்ட ஆடி வெள்ளிக்கிழமை அன்று, இரண்டு மாவட்டங்களில் இருந்து பெண்களும், ஆண்களும் பெருந்திரளாக வந்து கோயிலில் கூடுகின்றனர்.



நான்கைந்து வயதுக்குட்பட்ட ஐந்து சிறுமிகளுக்கு, முதலில் வளையல் அணிவிக்கப்படுகிறது. அடுத்து ராஜ நாகலெட்சுமி குடிகொண்டிருக்கும் புற்றுக்கு வளைகாப்பு நடத்

# புற்றுக்கு



தப்படுகிறது. புற்று உள்ளே வளையல் வைத்து வழிபாடு (காண்க:படம்) செய்யப்படுகிறது. அதன் பின்னர் கோயிலுக்கு வந்திருக்கும் கர்ப்பிணிப் பெண்கள் அனைவர்க்கும் ஓரிடத்தில் வரிசையாக அமர வைத்து, வளைகாப்பு நடத்தப்படுகிறது.

வீட்டில் நடத்தப்படுவது போலவே, வந்துள்ள கர்ப்பிணிப் பெண்களுக்கு வளைகாப்பு செய்வது மிகச் சிறப்பு. மஞ்சள், குங்குமம், தாலிக்கயிறு அளித்து வளையல்கள் கை நிறைய அணிவிக்கப்படுகிறது. இது தவிர, வந்திருக்கும் இதரப் பெண்களுக்குக் கைவளையல்கள் அம்மன் பிரசாதமாகத் தரப்படுகின்றன. இங்கு வந்து வளைகாப்பு செய்து கொண்டு போன பெண்கள், குறிப்பிட்ட ஆடி வெள்ளி வளைகாப்பு அன்று, தமது குழந்தைகளுக்கும் வளையல் போட்டு விடுகின்றனர்.


தனசேகரன்


அன்னக்கிளி

''மூணு அக்காக்களுக்குத் திருமணம், இங்கு வந்து வேண்டிக் கொண்ட பின்னரே கைகூடி வந்தது. அடுத்து நான். எனக்கு எங்க வீட்ல 'இதுதான் பொண்ணு. இதுதான் மாப்பிள்ளை'ன்னு குறிப்பிட்டு வந்தே வேண்டிக்கிட்டாங்க. கரெக்டா நான் விரும்பிய அதே மாப்பிள்ளைக்கும் எனக்கும்தான் கல்யாணம் ஆச்சு. இப்ப நான் மாசமா இருக்கேன். ஆடி முதல் வெள்ளிக்கு வந்து, ராஜநாகலெட்சுமி அம்மன் முன்னால வளையல் போட்டுக்கிட்டேன்!'' எனச் சொல்கிறார் மோகனூர் அன்னக்கிளி.

''இந்த விழா ஒன்பது ஆண்டுகளாக நடத்தப்படுகிறது. விழாவில் சுமார் இருநூறு கர்ப்பிணிப் பெண்களுக்கு வளைகாப்பு செய்யப்பட்டு, அந்தப் பெண்களுக்கு ஏழு வகைச் சாதமும், வந்திருந்த பக்தர்களுக்கு ஐந்து வகைச் சாதமும் வளைகாப்பு விருந்தாக பரிமாறப்பட்டது. இதற்கெனக் குறிப்பிட்ட கட்டணம் ஏதும் வசூலிக்கப்படுவது இல்லை. பக்தர்கள் தருகின்ற நன்கொடை மூலம் நிறைவேற்றப்படுகிறது!'' என்கிறார் கோயில் நிர்வாகி தனசேகரன்.

# வளைகாப்பு!



**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

‘தேடிச் சோறு நிதம் தின்று’ எனத் துவங்கி, ‘பெரும் கூற்றுக்கு இரை என பின் வீழ்வேன் என நினைத்தாயோ’ என்று கேள்விக் கேட்கும் பாரதியார் பாடலைத்தான் அடிக்கடி மனத்துக்குள் மந்திரம் போல முணுமுணுப்பேன் என சொல்லும் ரீனா கோவையில் ஒக்கிலிகர் சமூகத்தில் முதல் ஐ.ஏ.எஸ்.ஆக தேர்வாகி இருப்பவர்.

காரமடைக்கு அருகேயுள்ள தோலம் பாளையம் கிராமத்தில் இருக்கும் இவர் எம்.எஸ்.சி. முடித்து எம்.பில் படித்துக் கொண்டிருக்கிறார். இந்தியாவின் பாஸிட்டிவ்வான வெளிச்சமாய் ‘பளிச்’சென தெரியும் அவரைச் சந்தித்து பேசியதிலிருந்து...

# இந்தியா பாஸிடிவ்

## ஜெயித்தவர்களின் கதை

# கேரக்டர்

**ஐ.ஏ.எஸ். ஆவேன்னு நினைச்சிங்களா?**

‘‘நான் நினைக்கலை. ஆனா என் அப்பா தன்னோட ஆழ்மனசுலேர்ந்து சொன்ன ஐ.ஏ.எஸ். என்ற சொல்லை என் மேல வீசிக்கிட்டே இருந்தாரு. அது வரமா பலிச்சிடுச்சு... முயற்சி என்னுடையதாக இருந்தாலும் முடிவு அப்பாவின் தீராத ஆசைதான்!




**எப்படிச் சொல்றீங்க?**

அப்பா என்னைப் பேர் சொல்லிக் கூப்பிட்ட நாட்களை விரல்விட்டு எண்ணிடலாம். என்னை ‘கலெக்டரே!’, ‘கலெக்ட்ரம்மா’ என்றுதான் கூப்பிடுவார். ஆனா நான் கலெக்ட்ராக விரும்பல.

**ஏன்?**

ஐ.ஏ.எஸ். ஆகி கலெக்டர் போஸ்ட் வந்துட்டா பேரும் புகழும் மட்டுமல்ல; வசதியும் அதிகாரமும் வந்துடும். அதனால, தான் ஈஸியா பெரிய ஆளா வந்துடலாம்னு அப்பா நினைச்சாரு. அந்த நினைப்பு பிடிக்காம நான் ஐ.ஏ.எஸ். படிப்புல கவனம் செலுத்தலை.

அப்பாவின் மறைவுக்குப் பின் எனக்குள் நிறைய மாற்றங்கள். அப்பாவின் ஆத்மாவைத் திருப்திப் படுத்தணும்னா ஐ.ஏ.எஸ். ஆகணும். ஆனா நோக்கமும் லட்சியமும் நம்மோட சிந்தனையாக இருக்கணும்னு முடிவு பண்ணிக் களத்தில குதிச்சேன்.

**உடனே ஜெயிச்சிட்டீங்களா?**

என்னோட வெற்றியும் சாதனையும் சமூகம் சார்ந்து இருக்கணும்னு நினைச்சேன். அப்படின்னா ஏழை ஜனங்களுக்கு ஏதாவது நல்லது பண்ணணும். நல்லதைாக செய்ய அதிகாரம் வேணும். அதிகாரத்தைப் படிப்பு கொடுக்கணும்னா அது ஐ.ஏ.எஸ். படிப்பாதான் இருக்க முடியும்னு நம்பினேன்.

**ஐ.ஏ.எஸ். ஆனாலும் அரசியல்வாதிகள்கிட்டே தானே வேலை செய்யணும்?**

ஜனநாயகத்தில் அரசியல்வாதிகள் ஐந்து ஆண்டுகளுக்குரியவர்கள். நாம நம்முடைய கேரக்டர் மேல உறுதியா நம்பிக்கையா இருந்தா அது நம்மை வளைஞ்சு கொடுக்காம காப்பாற்றும்.

**எதிர்கால திட்டம்...**

# உறுதியாயிருக்கணும்!



இந்த உலகத்தைக் காப்பாற்ற சுற்றுச்சூழல் விழிப்புணர்வும் வாழ்வின் துயரங்களைக் களைய கல்வி என்ற மாமருந்தும் தான் முக்கியம். அதை மக்களிடம் கொடுக்க வாழ்க்கையை அர்ப்பணிக்கணும். பெண்களை இணைக்காத ஏதும் வெற்றி பெறாது. எல்லாத் துறையிலும், குறிப்பா அரசியலிலும் 33 சதவிகிதம் ஒதுக்கீடு அவசியம் வேண்டும். அதை பெண்கள் உணரச் செய்யணும்... செய்வேன்.

தோல்வி எனும் படிக்கட்டுகளின் மூலமாகத்தானே வெற்றியை அடைய முடியும். மூன்று முறைத் தோற்று நான்காவதாக ஐ.ஏ.எஸ். பாஸானேன்.

**இஞ்ஜினியர், மருத்துவர்ன்னு ஆகாமல் எதுக்கு ஐ.ஏ.எஸ்?**

- பூங்கொடி, கோவை

ஒரு மாதத்துக்கு அதிகபட்சம் 5 வாரங்கள் இருக்கலாம். ஆனால் 14 வாரங்கள் உள்ள மாதம் உண்டா? உண்டு எனில் ஜூலை மாதம் 17-ஆம் தேதி துவங்கி, அக்டோபர் மாதம் 17-ஆம் தேதி வரைக் கணக்கிட்டு, பதினான்கு வாரங்கள் ஆடிப்பெருவிழா பெரு விமரிசையாகக் கொண்டாடப்படுவது எங்கு என்று உங்களுக்குத் தெரியுமா?

★ தம் சகோதரரான கிருஷ்ண பரமாத்மா தமக்களித்த சங்கையும் சக்கரத்தையும் தம் திருக்கைகளில் ஏந்தி அருள்பாலிக்கும் அம்மனைப் பார்த்திருக்கிறீர்களா?

★ தம் உடலில் உள்ள பிணியைத் தீர்த்த அம்மனுக்கு நன்றி சொல்லும் விதமாக ஆடையைக் களைந்து வேப்பஞ் சேலை உடுத்திச் செல்லும் பக்த கோடி களைக் காண வேண்டுமா?



# பிணி தீர்க்கும்

மேலே கேட்கப்பட்டுள்ள மூன்று கேள்விகளையும் படிக் கும் பொழுதே, அட ஆச்சரியமா இருக்கே, அந்த அற்புத அம்மன் கோவில் எங்க இருக்கு? எப்படி போகணும் என உங்களுக்குள் ஆர்வம் மேலிடுகிறதா? சென்னை கோயம்பேட்டிலிருந்து சுமார் 45 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள பெரியபாளையத்திற்கு இந்தச் சிறப்புகள் உண்டு.



★ காதுகுத்தல்

வழி நெடுகிலும், வேப் பிலைத் தோரணம் கட்டிய கார்கள், லாரிகள், மாட்டு வண்டிகள், ஏன் ஆட் டோக்கள் என பெரிய பாளையம் நோக்கி செல்லும் பக்தர்களின் கூட்டம் ஏராளம்.

கோவிலைச் சுற்றிலும் அங்கங்கே விற் கப்படும் பானை, கள்ளிக் கடைகளில்

# வெப்பஞ்சேலை!

ஏகக்கூட்டம். ஐம்பது வருடங்களாக, பானை வியாபாரத்தை நடத்தி வரும் சாரதா, "இந்தா இந்த பானை, சுள்ளி, விறகு எல்லாமும் வாங்கிகிட்டு போம்மா, எல்லாம் சேர்த்து 35 ரூபா ஆகும்'' என்றார். இங்க சாமி கும்பிட வர்றவங்க எல்லாம் முதல்ல நம்ம கைல பானை எல்லாம் வாங்கி மீன், ஆட்டுக்கறி, கோழின்னு எல்லாத்தையும் சமைச்சு சாப்பிடுவாங்க. அல்லாமே கோவிலுக்கு அப்பாலதான்'' என்றார்.

வேப்பிலை ஆடைகள் முப்பது ரூபாய்க்கு விற்கப்பட்டு கொண்டிருந்தன. சின்னக் குழந்தை முதல் வயதான பெரியவர்கள் வரை யாருக்காவது தீர்க்க முடியாத நோய் வந்துட்டா, 'அம்மா உன் சன்னிதானத்துக்கு வேப்பிலை உடையோட (மட்டும்) வர்றேன் தாயி, என் பிணியை நீக்குவது உன் பணி' என மனதார வேண்டிக் கொண்டால் போதும். தீராத பிணி கூடச் சட்டென பவானி அம்மனின் அருளால் சரியாகி





விடுவது அதிசயத்திலும் அதிசய நிகழ்வாகும்.

திருக்கோவிலைச் சுற்றி வர அங்கே சுற்றி விடப்படும் ஆடு, கோழிகளின் சத்தம். 'அது என்ன கோழி ஆட்டெல்லாம் சுத்தி விடறீங்க' என்று அங்கிருக்கும் உஷா ராணியை கேட்டோம். "ஒருத்தங்க ரொம்ப உடம்பு சரியில்லாம மரணத்தின் பிடியிலிருக்கும் பொழுது, இந்த அம்மனுக்கு உயிருக்கு உயிரா ஆடு சுத்தி விடறேன்னு வேண்டிக்கிட்டு உயிர் பிழைச்சிட்டு நல்லா படியா குணமாகி இங்க வந்து அவங்க உயிர பிழைக்க வெச்ச அம்மனுக்கு இன்னொரு உயிரைச் சுத்தி விடறது தான் நீங்க இப்போ பார்த்துகிட்டு இருக்கீங்க...'' என்றார்.

அம்மன் சன்னதியில் தான் காது

தவும், நல்ல புருஷன் தமக்குக் கிடைக்க அருள் செய்யம்மா என வேண்டி நிற்கும் கன்னிகளின் கூட்டம், பயபக்தியுடன் அம்மனுக்குப் பொங்கல் சமைக்கும் கூட்டம் ஒரு பக்கம் என அலை மோது கிறது பெரியபாளையத்து ஓம் ஸ்ரீ பவானி அம்மன் திருக்



* சுத்திவிடல்





* படையல்

**உயிர பிழைக்க வெச்ச அம்மனுக்கு இன்னொரு உயிரைச் சுத்தி விடறதுதான்...**

கோயில்.

பவானியாக வந்தமர்ந்து அருள்பாலித்து வரும் அம்மனின் சிலிர்க்க வைக்கும் ஆன்மிக அனுபவத்தில் நனைய பெரியப்பாளையம் நோக்கி உடனே கிளம்புங்கள்.

விசேஷமாக கொண்டாட்டப் படும், ஆடி மாத 14 வாரங் களுக்குள் ஒரு நாள் (ஞாயிற்றுக் கிழமை) சென்று தரிசித்துவிட்டு வாருங் களேன்.

குத்தல் நடக்கணும் எனக் கையில் குழந்தையுடன் காது குத்துவதற்காகக் காத்துக் கொண்டிருக்கும் கூட்டம் ஒரு புறம், நல்லபடியாக குழந்தை பாக்கியம் கிடைக்க வேண்டும் என மரத் தொட்டிலுடன் அம்மாவாகும் பாக்கியம் வேண்டி பயபக்தியுடன் நின்று கொண்டி ருக்கும் பெண்கள் கூட்டம் மறுபுறம். புற்றுக் கோவிலில், தம் கணவரின் உயிரை நல்ல படியாக மீட்டுக் கொடுத்த அம்மனுக் குத் தாலியைக் காணிக்கையாகச் செலுத்

புகைப்படங்கள் மற்றும் தொகுப்பு:

**நளினி சம்பத்குமார்**

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

VBC Jewellery

HOUSE OF VUMMIDI

இணைந்து வழங்கும்



# 'வைர மங்கை'

## -சிறப்பு சந்தா திட்டம்!*

கல்கி நிறுவனத்தின் மற்றொரு வெளியீடான, தரத்திலும் நம்பர் ஒன் மகளிர் மாத இதழ் மங்கையர் மலர் ஆகஸ்ட் இதழில், 'வைர மங்கை' - சிறப்பு சந்தா திட்டம் (பக்கம் 187) பற்றிய அறிவிப்பு வெளியாகியுள்ளது. இத்திட்டத்தின்படி எந்த ஒரு நபரும் மங்கையர் மலருக்கு சந்தா கட்டி, ஐந்து முத்து மங்கைகளை அறிமுகப்படுத்தலாம். அப்படி அறிமுகப் படுத்துப்வர் பவள மங்கை என்ற பட்டம் பெறுவார். பவள மங்கைக்கும் (ரூ.250/- மதிப்புள்ள) முத்து மங்கைகளுக்கும் (ரூ.100/- மதிப்புள்ள) பரிசுக் கூப்பன்கள் அந்த மாத இறுதிக்குள் அனுப்பி வைக்கப் படும்.

ஒவ்வொரு மாதமும் குறைந்த பட்சம் முப்பது முத்து மங்கைகளை அறிமுகப் படுத்துவதன் மூலம், பவள மங்கையி லிருந்து பதவி உயர்வு பெற்று மரகத மங்கை என்ற மகுடம் சூட்டப்படும்.

இவ்வாறு முப்பது சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தும் முதல் இருபது அதிர்ஷ்டசாலிகளின் புகைப்படம் அடுத்து வரும் மங்கையர் மலர் இதழில் வெளி யாகும். கூடவே 'வைர மங்கை' பம்பர் பரிசுக் குலுக்கலில் கலந்து கொள்ளவும் அவர்கள் தகுதி பெறுவார்கள்.

'கல்கி' நிறுவனத்தின் மற்றொரு வெளி யீடான நமது மங்கையர் மலர் இதழின் அன்புவட்டம் விரிவடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் கொண்டு வரப்பட்ட இத்திட்டத்துக்கு, வாசகியரின் ஏகோபித்த வரவேற்பைக் கண்டு மகிழ்ச்சி அடைகி றோம். கல்கி வாசகர்களையும் இத்திட்டத் தில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கி றோம்.

நீங்களும் வைர மங்கை ஆகணுமா? அதற்கான கூப்பன் அடுத்த பக்கத்தில்...

(ஆர்)

மேலும் விவரங்களுக்கு

**94443 83465 / 99400 73736**

இத்திட்டத்தில் மும்முரமாக இறங்கி முப்பது முத்து மங்கைகளை அறிமுகப் படுத்திய முதல் மூன்று மரகத மங்கைகள்...

*நிபந்தனைகளுக்கு உட்பட்டது

## ஜூலை மாத மரகத மங்கைகள்!



* சுசீலா அரவிந்தன், திருச்சி



* சுசீலா முத்துசாமி, சேலம்



* கோகுலவாணி, திருப்பூர்

## மங்கையர் மலர் - VBC இணைந்து வழங்கும் 'வைர மங்கை' சிறப்பு சந்தா திட்டம்

அன்பு அனுஷா நடராஜனுக்கு, பவள மங்கையான நான் (தற்போதைய மங்கையர் மலர் வாசகி), மங்கையர் மலரை, 5 முத்து மங்கைகளுக்கு அறிமுகப்படுத்துகிறேன். தாங்கள் கொடுத்துள்ள இந்த படிவத்தை முழுமையாகப் பூர்த்தி செய்து, 5 ஓராண்டு சந்தாதாரர்களின் தொகையாக, ரூ.1250/- மங்கையர் மலர் என்ற பெயரில் டி.டி/M.O மூலம் இணைத்துள்ளேன். என்னுடைய 5 முத்து மங்கை தோழிகளுக்கும், மங்கையர் மலர் இதழை அடுத்த மாதத்திலிருந்து அனுப்பி வைக்கவும். எனக்கும் என் தோழிகளுக்குமான பரிசுக் கூப்பன்களையும் அனுப்பி வைக்கவும். மேலும் பல முத்து மங்கைகளை அறிமுகப்படுத்த என்னால் இயன்றவரை முயலுகிறேன்.

### பவள மங்கை

எனது பெயர் :.............................................

முகவரி:.............................................

.............................................

.............................................

சந்தா எண்: (தாங்கள் சந்தாதாரராக இருந்தால்)

.............................................

ஃபோன்: .............................................

ஈமெயில்.............................................

### நான் அறிமுகப்படுத்தும் முத்து மங்கைகள்:

1. பெயர் : .............................................

முகவரி : .............................................

.............................................

.............................................

ஃபோன்:.............................................

ஈமெயில்.............................................

2. பெயர் : .............................................

முகவரி : .............................................

.............................................

.............................................

ஃபோன்:.............................................

ஈமெயில்.............................................

3. பெயர் : .............................................

முகவரி : .............................................

.............................................

.............................................

ஃபோன்:.............................................

ஈமெயில்.............................................

கல்கி

4. பெயர் : .............................................

முகவரி : .............................................

.............................................

.............................................

ஃபோன்:.............................................

ஈமெயில்.............................................

5. பெயர் : .............................................

முகவரி : .............................................

.............................................

.............................................

ஃபோன்:.............................................

ஈமெயில்.............................................

உறையின் மீது 'வைர மங்கை' என்று குறிப்பிட்டு அனுப்பவும்

இப்படிக்கு



### அனுப்ப வேண்டிய முகவரி

*மங்கையர் மலர் சந்தா பிரிவு, மங்கையர் மலர்,*
*கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,*
*ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032*

தேதி:.............................................

## அருள்வாக்கு



# மனசு!

ஜீவன் மாதிரியில்லை. ஈஸ்வரன் மனசுக்கும் மேற்பட்ட சக்தி. அதனாலே அவனுடைய கிருபையில்தான் மனசு அடங்க முடியும். அது தம்மைத் தாமே அடக்கிக் கொள்ளவில்லை. ஈஸ்வரன்தான் மாயைக் கலப்பற்ற தம்முடைய ஆத்ம ஸ்வரூபத்திலே ஜீவமனசை வசப்படுத்தி வைக்கிறான். பிரயாஸை, பிரயத்தனம்தான் ஜீவன் செய்யக்கூடியது. அதற்கு மேலே மாயா நாடகத்தைப் பண்ணினவன்தான் சித்தியை அருளவேண்டியவன். ஆனபடியால், ஓயாமல் வேலை பண்ணிக் கொண்டேயுள்ள மனசு எப்படி வேலையே பண்ணாததும், தமக்கு அப்பாற்பட்டதாய் இருக்கிற ஆத்மாவிலே கரைந்து போக முடியும் என்று தர்க்கரீதியில் கேட்பதில் அர்த்தமில்லை. அதைத்தானே மாயை இதுவாக்கியிருக்கிறது? இதே மாதிரி, திரும்ப 'அது' அதுவாக ஆகவும் இடம் கொடுத்து, தான் விலகிப்போய் விடுகிறது.

மனசால் ஆத்மாவைப் பிடிக்க முடியாது. ஆனால், நமக்குத் தெரிந்தது, நம்மை சதாசர்வ காலமும் இறுக்கிப் பிடித்துக்கொண்டிருப்பது, இந்த மனசுதான். அதனால் இதை வைத்துக்கொண்டுதான் நாம் பிரயாசை, பிரயத்னம், சாதனை செய்தாக வேண்டும். மனசினால் முடியக்கூடியது, உபத்ரவம் பிடித்த தம்மை எப்படியாவது தொலைத்துத் தலைமுழுகி விட்டு உபத்ரவமே இல்லாத ஆத்மாவாக ஆகிவிட வேண்டுமென்று நினைப்பதுதான். தம்மால் முடிந்த இந்த நினைப்பை அது விடாமல் வைராக்யத்தோடு பயிற்சி செய்து கொண்டேயிருக்க வேண்டும். அப்புறம் கிருபை என்று ஒன்று இருக்கிறது அல்லவா? அது பாக்கி வேலையைப் பார்த்துக் கொண்டுவிடும்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

# உள்ளும்



வண்ணநிலவன்

“என்னப்பா நீங்க...? அக்காகிட்டே பேசச் சொன்னால் அத்தான்கிட்டே பேசிட்டீங்களே?'' என்று வருத்தப்பட்டான் மனோகர்.

''நான் என்னடா பண்ணட்டும்...? அக்கா ஃபோனுக்குத் தாண்டா போட்டேன். அக்கா கோயிலுக்குப் போயிருக்கா... ஃபோனை எடுத்துட்டுப் போகாமப் போயிருக்கா... அத்தான் எடுத்துப் பேசினார். சரி... அவர்கிட்டேயே பேசிருவோ மேன்னு பேசினேன்...'' என்றார் சம்பந்தம்.

''சரி... இன்னைக்காவது அக்காகிட்டே பேசுங்க...''

''இப்போ மணி என்ன? எட்டரையா? காலையிலே ரொம்பப் பிஸியா இருப்பா. அவ ஆஃபீஸுக்குப் போனப்புறம் பேசறேன்...''

''ஆஃபீஸ்லே எல்லாரும் இருப் பாங்கப்பா... லேடீஸ் ரூமுக்குப் போகச் சொல்லி அங்கே வெச்சுப் பேசுங்க... ஆஃபீஸ்லே மத்தவங் களுக்கெல்லாம் எதுக் குத் தெரியணும்?''

''சரி...'' என் றார் சம்பந்தம்.

புறமும்

மெல்லினத் தொடர்கதை

17

''என்னைக் கேட்டால் நீங்க இந்தச் சமாச்சாரத்தைப் ஃபோனிலே பேசறதைவிட நேரிலே போய்ப் பேசினா நல்லதுன்னு தோணுது.''

''நேரிலேயா? மெட்ராஸுக்கா?''

''ஆமா.''

''போயிட்டு வரலாம்தான்... ஆனால் ரயில்லே உடனே டிக்கெட் எங்கே கெடைக்கப் போகுது?''

''ஏன், பஸ் இல்லையா?''

''அவ்வளவு தூரம் பஸ்லே எப்படிடா போறது?''

''அவசரம்னா போயித்தாம்ப்பா ஆகணும்...''

சம்பந்தம் யோசித்தார். ''முதல்லே ஃபோன்லே பேசிப் பாக்க றேன்... வேறே வழியில்லைன்னா போயிட்டு வர்றேன்...'' என்றார்.

''சரி... எப்படியோ செய்யிங்க'' என்று சொல்லிவிட்டு மனோகர் சென்றான். வாசலில் கீரைக்காரி கூப்பிட்டாள். ''ரஞ்ஜனி... பல வேசம் வந்திருக்கா பாரு... கீரையை வாங்கு... நல்ல கட்டா பாத்து வாங்கு... துட்டு சம்படத்திலே இருக்கு...'' என்று அடுக்களையி லிருந்து குரல் கொடுத்தாள் மீனாட்சி.

''என்னம்மா நீ? காலேஜ் போற நேரத்துலே வேலை சொல்லிக் கிட்டு...'' என்று எரிச்சல்பட்டுக் கொண்டே தெரு வாசலுக்குச் சென்றாள் ரஞ்ஜனி. சம்படத்திலிருந்து காசை எடுக்காமல், தன் பர்ஸிலிருந்தே காசை எடுத்துக்கொடுத்தாள்.

''இந்தக் காலத்துக் கொமருகளுக்கு ஒரு வேலை சொல்லிரக் கூடாது...'' என்று முணுமுணுத்துக் கொண்டாள் மீனாட்சி. கீரைக் கட்டை சமையலறையில் வைத்துவிட்டு, கல்லூரிக்குப் புறப்படு வதற்காக மாடிக்குச் சென்றாள் ரஞ்ஜனி. சிறிது நேரத்தில் மனோகரும், ரஞ்ஜனியும் சென்று விட்டனர். சம்பந்தம் தன் அறையில் உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தார். மனோகரி, ரொம்பச் சாதுவானவள் என்று நினைத்துக் கொண்டிருந்தோமே. இப்படி ஒரு முடிவு எடுத்து விட் டாளே. ஒருவேளை அவள் நினைக்கிற மாதிரியே மாப் பிள்ளைக்கும், அந்தக் கவிதை எழுதுகிற பெண்ணுக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமோ? இல்லாமலா இந்த அளவுக்கு எக்ஸ்டிரீமா ஒரு முடிவை எடுப்பாள்? ஆனால், நேற்று மாப்பிள்ளையிடம் பேசியபோது, அந்த மாதிரி அவருக்கும் அந்தச் சுசீலாவுக்கும் விபரீதமான உறவு எதுவும் இருக்கிறமாதிரியும் தெரியவில்லையே. பெண்களைவிட ஆண்களுக்குக் கொஞ்சம் சபல புத்தி உண்டு. என்றாலும், இரண்டு பிள்ளைகளைப் பெற்ற

பிறகா மாப்பிள்ளை இப்படி மோக வசப் படுவார்?

சம்பந்தத்துக்கு ஒரே குழப்பமாக இருந்தது. யோசிக்க யோசிக்க குழப்பம் தான் அதிகமாயிற்று. பத்து மணியாகட்டும். மனோகரி ஆஃபீஸுக்குப் போய் விடட்டும். அவளிடம் பேசினால்தான் ஒரு தெளிவு கிடைக்கும். ஆனால், அவள்தான் தன் நிலையை மனோகரிடம் தெளிவாகச் சொல்லிவிட்டாளே? நாம் கேட்டாலும் இதைத்தான் சொல்லப் போகிறாள். வெயில் தாளாமல் எங்கேயோ குயில் கூவியது. தலைக்கு மேல் ஃபேன் ஓடுகிற சத்தம் ஒரே சீராகக் கேட்டுக் கொண்டிருந் தது. மீனாட்சி அறைக்குள் வந்தாள்.

''எந்தக் கோட்டையைப் புடிக்கிறதுக்கு யோசனை பண்ணிக்கிட்டு இருக்கியோ...? மனோகருக்கு வந்துதே அந்தத் தென்காசி ஜாதகம். அதை எடுத்துட்டுப் போய் ஜோஸியரைப் பாத்துட்டு வந்தா என்ன? பொழுதன்னைக்கியும் வீட்டுலய அடைஞ்சு கெடந்தா, வீட்டுல இருக்கிற ரெண்டு பேரையும் கரை ஏத்துறது எப் படி?''

''ஆமா... ஒருத்தியைக் கரையேத்தி எல்லாத்தையும் பாத்தாச்சு... இவளையும் கரையேத்தி விட வேண்டியதுதான்...'' என்று சலித்துக் கொண்டார் சம்பந்தம்.

''ஏன் மனோகரிக்கு என்ன வந்தது? ராசாத்தி மாதிரி சீரும் செறப்புமாத்தான் அவ இருக்கா...''

''ஆமா... நீ நெனைச்சுக்கிட வேண்டி யதுதான். அவ குடும்பத்துல ஆயிரம் ஓட்டை இருக்கு.''

''என்ன ஓட்டையைக் கண்டீஹே?''

''பிள்ளைகளுக்குப் பள்ளிக்கூடம் லீவு விட்டப்பறம் அவ, குழந்தைகளைக் கூட்டிக்கிட்டு இங்கேயே வந்துடப் போறா ளாம்.''

''வருசா வருசம் லீவுக்கு வாரதுதானே?''

''லீவுக்கு இல்ல. நெரந்தரமாவே இங்கே வரப் போறாளாம்...''

''அப்போ மாப்பிள்ளை?''

''விவாகரத்து வாங்கப் போறாளாம். மாப்பிள்ளை கூடச் சேர்ந்து வாழ இஷ்டம் இல்லையாம்.''

''இது என்ன கூத்தா இருக்கு? யாரு சொன்னா?''

''வேற யாரு சொல்வா? மனோகர்தான் சொல்றான்.''

''மனோகர் சொன்னானா? ஏன் அவளுக்கு என்ன ஆச்சு? ஏதாவது புத்திக் கித்தி பெசகிப் போச்சா?''

''மாப்பிள்ளையைத் தேடி அடிக்கடி ஒரு பொண்ணு வீட்டுக்கு வர்றாளாம். அது இவளுக்குப் பிடிக்கலை. புருசனோட இனிமே இருக்க மாட்டேன்னு பொறப்

## முனைவர் சொர்ணமால்யா

''இப்போ எனக்கு கல்வெட்டு, தொல்பொருள் மேல ஈடுபாடு அதிகமாயிடுச்சு. அதனால பிராஹ்மி, கிராந்தி எழுத்துகளை



பட்டு வரப் போறாளாம்.''

''இது என்ன கதையா இருக்கு? அவ மாமனார், மாமியாருக்குக்கெல்லாம் தெரியுமா?''

''தெரியுமோ தெரியாதோ... யாருக்குத் தெரியும்.''

''நீங்க அரைகொறையாத் தெரிஞ்சுக்கிட்டு ஏதாவது பேசிக்கிட்டுத் திரியாதீங்க...''

''அரையுமில்ல... கொறையுமில்லே... அவளேதான் மனோகர்கிட்டே அவ்வளவையும் சொல்லியிருக்கா...''

மீனாட்சியம்மாள் அப்படியே பிரமித்து நின்றுவிட்டாள். அவளுக்கு வியர்த்தது.

**மே**ஜையில் கண்ணாடிக்குக் கீழே

கத்துக்கிட்டு கல்வெட்டுக்களில் நாட்டியம் பற்றியக் குறிப்பு என்னென்னு ஆராய ஆரம்பிச்சுட்டேன். பழைமை தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அது இல்லேன்னா புதுமை எப்படி வரும்'' என்கிறார் முனைவர் பட்டம் பெற முனைப்போடு இருக்கும் சொர்ணமால்யா. ''என்னிடம் நாட்டியம் கற்றுக்கொள்ள வரும் குழந்தைகளுக்கு அவ்வப்போது பாட்டும் சொல்லித் தருகிறேன்'' என்கிறார் சொர்ணமால்யா.

- நளினி சம்பத்

வைத்திருந்த சுவாமி படங்களை எல்லாம் கையால் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டாள் மனோகரி. பிடரி, நெற்றியெல்லாம் வியர்வை வழிந்தது. சேலை முந்தானையால் துடைத்துக்கொண்டாள். ப்யூன் தாண்டவன் ஒரு கண்ணாடித் தம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து வைத்தான். மேஜை மீது கிடந்த சிறு பிளாஸ்டிக் வட்டை எடுத்துத் துடைத்து தண்ணீரை மூடி விட்டுச் சென்றான். ஸ்ரீதர் தனது ஸீட்டிலிருந்தவாறே 'குட்மார்னிங் மேடம்' என்றான். 'கடனே' என்று மனோகரியும் பதிலுக்கு குட்மார்னிங் சொல்லி வைத்தாள்.

அவளுடைய ஜன்னலருகே பன்னீர் மரம் பூத்துக் கிடந்தது. ஸீட்டில் உட்கார்ந்தவாறே மரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சாயந்திரம் வருணுக்குக் கட்டை அவிழ்க்க வேண்டும். இரண்டு பேருக்கும் இட்லி எடுத்து வைத்தோமே, கூடவே சட்னியை எடுத்து வைத்தோமா என்று யோசித்தாள். பாவம், சட்னி இல்லாமல் எப்படிச் சாப்பிடுவார்கள்? மனம் ஒரு நிலையில் இல்லாததால் வேலையில் தடுமாற்றம் வந்து விடுகிறது. லெட்சுமி வந்தாள்.

''எந்த வண்டியடி புடிச்சே?'' என்று கேட்டாள்.

''ஏன், பல்லாவரம் ரிட்டன்லேதான் வந்தேன்...'' என்றாள் மனோகரி.

''அதான் சீக்கிரம் வந்துட்டே... எனக்கு ஆத்துலேயே லேட்டாயிடுத்து... நல்ல வேளை இன்னும் நரசிம்மம் வந்து சேரலை...'' என்றாள்.

''என்ன செய்யறது...? பொம்பளைங்க ஆயிரம் வேஷம் போட வேண்டியிருக்கு. வீட்டிலே பொஞ்சாதி வேஷம், அம்மா வேஷம், ஆஃபீஸ்லே உத்யோக வேஷம்...''

''எத்தனை மணிக்குக் கார்த்தாலே எழுந்துண்டாலும் வேலை சரியா இருக்குடி...''

''என்ன செய்யறது...? எடுத்த ஜென்மத்தை முடிக்கணுமே...''

''ஏண்டி ரொம்ப விரக்தியாப் பேசறே?'' என்று மனோகரியின் தோளை ஆதரவாகத் தொட்டுக் கேட்டாள் லெட்சுமி. ''வீட்டிலே ஏதாவது பிரச்னையா?'' என்றாள்.

''என்னைக்குத்தான் பிரச்னை இல்லே? தினசரி ஏதாவது ஒண்ணு நடந்துக்கிட்டேதான் இருக்கு...'' என்று மனோகரி சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவளது மொபைல் அடிக்க ஆரம்பித்தது.

**(தொடரும்)**

''தலைவர் அடிக்கடி வெளியில வந்து
வாசலையே பார்க்கிறாரே ஏன்?''
''கூட்டணி வைத்துக்கொள்ள யாராவது
வர்றாங்களான்னு பார்க்கிறாராம்.''

# சிம்மாசனம்

''என் கணவர் என் கிட்டே ஃப்ரெண்டா நினைச்சுத்தான் பழகு வாரு.''

''நிஜமாவா?''

''ஆமாம். மனைவியா நினைச்சா அவருக்கு ஒரே பயமா இருக்காம்.''

- வி.சாரதிடேச்சு



''மன்னா வேட்டையை ஒரு மணி நேரத்திற்குள் முடித்துவிட வேண்டும்...''

''ஏன் அமைச்சரே?''

''விலங்குகளுக்குக் கொடுத்த மயக்க மருந்து ஒரு மணி நேரம்தான் வேலை செய்யும்!''

-எம்.அசோக்ராஜா





"யோகாசனம் செண்டருக்கு போன நம்ம தலைவர் மானத்தை வாங்கிட்டாரு"

"எப்படிச் சொல்றே?"

" 'சிம்மாசனம்' கத்து தர முடியுமான்னு கேட்குறாரே"

-ஆர்.பி.ஜெயச்சந்திரன்

# கத்துதர முடியுமா...?



"பெரிய பெரிய மீனா கொண்டாந்திருக்கியே, அப்புறம் ஏன் புலம்பறே...?"

"பொழப்பு நடத்த ஒரு ஆக்டோ பாஸ் கிடைக்கலியே புள்ள...!"

-நங்கநல்லூர் ஜீவி



"வாய்மை பற்றி திருவள்ளுவர் என்ன சொன்னார்?"

"என்னிடம் எதையும் சொல்லவில்லை சார்..."

- கே.ஆர்.ஜெயலட்சுமி





# ஜெ...க்கு நான்கு ஜெ... பரிசு!

தென்கச்சி சுவாமிநாதன் மருத்துவ மனையிலிருந்த இறுதி நாட்கள். அவரைக் காணச் சென்ற நண்பர் ஒருவர், ''நேற்று டி.வி.யில் ஒருத்தர் உங்களைப் போலவே அச்சு அசலாகப் பேசிக் காண்பித்தார்... அப்படியே நீங்கதான்!'' என்றார்.

''அவரைக் கொஞ்சம் வந்து இங்கே எனக்குப் பதிலா படுத்துக்கச் சொல் லேன்...'' என்றார் தென்கச்சி சுவாமி நாதன்!

தென்கச்சியார் கடைசி காலத்திலும் நகைச்சுவை உணர்வு ததும்ப வாழ்ந்த இந்தச் சம்பவத்தை, ஹ்யூமர் கிளப் இன்டர்நேஷனலின் 27வது ஆண்டு





ஞாயிறு மாலை (25.7.10) நகைச்சுவை மன்றத்தோடு போட்டி போடலாகாது என்று, அப்புசாமி - சீதாப்பாட்டி அறக்கட்டளை அதற்கு முன்தின மாலையே தமது கூட்டத்தை நடத்தியது. டாம் அண்ட் ஜெர்ரி ரேஞ்சுக்கு பாப்புலர் ஆகிவிட்ட பாட்டி தாத்தாவுக்கு கோட்டுருவம் தந்த ஓவியர் ஜெயராஜ் பாராட்டப் பெற்றார். மாருதி, ம.செ., அரஸ், ஆனந்த் என நான்கு ஓவியர்கள் ஜெயராஜை சித்திரமாக வரைந்து அவருக்கே பரிசளித்தனர்!

**- சாயா,** படம் : **கிளிக் ரவி**

விழாவில் நினைவுகூர்ந்தார் சுகிசிவம். எப்போதும் மகிழ்ச்சி என்ற தலைப்பில் பேசியவர், மனத்தின் இறுக்கத்தைத் தளர்த்தி வாழ்க்கையில் கொஞ்சம் வெற்றிடத்துக்கும் இடம்கொடுத்தால் நிம்மதி, மகிழ்ச்சிதான் என்று சிரிக்கச் சிரிக்க விவரித்தார்.

நிகழ்ச்சி நடைபெற்ற சென்னை காமராஜர் அரங்கிலோ வெற்றிடம் இல்லாத நிறைகூட்டம்! அத்தனை முகங்களிலும் சிரிப்பு பூத்தவண்ணம் இருக்க, மேடையலங்காரத்தில் வண்ண வண்ணப் பூக்கள் சிரித்த வண்ணம் இருந்தன.

கு.ஞானசம்பந்தம், பேராசிரியர் ராமச்சந்திரன் என்று நட்சத்திரப் பேச்சாளர்கள். அப்துல் காதர், பாரதி பாஸ்கர் ஆகியோருக்குப் பாராட்டு என்று நான்கு மணி நேர நிகழ்ச்சி - மொத்தமும் தென்கச்சி சுவாமிநாதனின் நினைவுக்கு அர்ப்பணிக்கப்பட்டது.

# இறுதிவரை சிரிப்பு!





**அ**ம்பிகையை - குறிப்பாக வாராஹியை வழிபடச் சிறந்த மாதம் ஆடி. அதாவது, ஆஷாட நவராத்திரி என்னும் தேயு நவராத்திரி. பொதுவாக, நவராத்திரி என்றால், புரட்டாசியில் வரும் சாரதா நவராத்திரிதான் நம் நினைவுக்கு வரும். ஆனால், அதைத் தவிர, மாக நவராத்திரி, வன்னி நவராத்திரி, வசந்த நவராத்திரி போன்றவை உண்டு. இவை அனைத்தையும் 'பஞ்சபூத நவராத்திரி' என்றும் சொல்வதுண்டு. இவற்றில், ஆடி மாதத்தில் வரும் நவராத்திரிதான்- வாராஹியை வழிபடச் சிறந்ததான, ஆஷாட நவராத்திரி. தேயு என்பது அக்னி என்று பொருள்படும்.



காட்டுப் பன்றியின் தலையும், இளம் பெண்ணின் உடலும் கொண்டவளாகத் தோற்றம் தரும் அன்னை வாராஹி அரும் பலன்களைத் தரவல்லவள். தஞ்சைப் பெரிய கோவிலின் பிராகாரத்தில், ஸ்ரீ வாராஹியின் சன்னிதி இருக்கிறது. அதைப் போன்றே, காஞ்சிபுரம் அருகிலுள்ள பள்ளூர், சென்னை அருகிலுள்ள படப்பை ஜயதுர்கா பீடம், சோழிங்க நல்லூரில் உள்ள பிரத்யங்கரா ஆலயம்... ஆகிய இடங்களில் வாராஹியைத் தரிசிக்கலாம்.



ஸ்ரீலலிதா பரமேஸ்வரியின் படைத்தலைவி, வாராஹி. இந்தத் தேவி, குதிரையில் வரும் கோலத்தை அஸ்வாரூடா என்றும் எருமையில் வரும் கோலத்தை மகிஷாரூடா என்றும் சொல்வார்கள். அபயம், வரதம், தண்டம், கலப்பை இப்படி நான்கு கரத்தினளாகவும், பல்வேறு ஆயுதங்களைத்தரித்த எட்டு கரத்தினளாகவும் காட்சியளிப்பாள் இந்தத் தேவி.

பஞ்சமி, அஷ்டமி ஆகிய தினங்களில் இவளைப் பூஜிப்பது விசேஷமானது. குறிப்பாக பஞ்சமி மிகமிகச் சிறப்பானது. 'பஞ்சமி பஞ்ச பூதேசி' என்று ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்தில் துதிக்கப்படுபவள் இந்தத் தேவிதான். 'வாராஹியைப் பூஜிப்பதில், காலம் தவறாமை முக்கியம்' என்பார் ஸ்ரீலஸ்ரீ துர்க்கைச் சித்தர். காலம் தப்பிப் பயிர் செய்வதும், நேரம் தவறி வாராஹியைப் பூஜிப்பதும் பலனளிக்காது என்பது இதன் பொருள். தவிர, வாராஹி வாக்குக்கு வலிமை தருபவள். 'வாராஹிக்காரனோடு வாயாடாதே' என்பது வழக்கு மொழி.

வார்த்தாளி, ஸ்வப்னேசி, அஸ்வாரூடா, மகாவாராஹி, உச்சிஷ்ட வாராஹி... என்று இந்தத் தேவிக்கு ரூப பேதங்கள் உண்டு. கனவில் தோன்றி வழிகாட்டுவது, பக்தனுக்கு முன்னே சென்று பாதுகாப்பது, எதிர்ப்புகள் எந்த நிலையிலும் எழவொட்டாமல் செய்வது, பகைகளைப் போக்கி வெற்றிகளை வர்ஷிப்பது, துணிவும் ஆற்றலும் கொடுப்பது... என்று வாராஹியின் பெருமையை மந்திர சாஸ்திரங்கள் பேசுகின்றன.



யைக் கொடுப்பதில் வாராஹி இணையற்றவள். 'அப ராஜிதம்' என்னும் குதிரையில் அமர்ந்தவளாக, ஸ்ரீ வாராஹியை பூஜித்து வழிபடுபவர்கள் மிகப் பெரிய பதவிகளை அடைவார்கள். அவர்களுக்கு எதிர்ப்பு என்பதே இல்லாமல் போகும் என்கின்றன மந்திர சாஸ்திரங்கள்.

பூமியிலிருந்து கிடைக்கும் கிழங்குகள் இவளுக்குச் சிறந்த நிவேதனம். கிழங்குகளை ஏற்பதன் மூலம், வாராஹி நமக்கு ஒரு செய்தி சொல்கிறாள். 'கிழங்குகள் பறிக் கப்பட்டு விட்டால், மீண்டும் அந்தச் செடி முளைக்காது. அதைப் போலவே, முன்வினைகளாகிய

# வல்லமை தருபவள் வாராஹி!

மந்திர உபதேசம் பெற்றவர்தான், வாராஹியை வழிபட வேண்டும் என்றில்லை. தனிச் சன்னிதி இல்லாமல் போனாலும்கூட, சிவாலயங்களில் உள்ள சப்த மாதர்களில், வாராஹியும் இடம் பெற்றிருக்கிறாள். அவளுக்கு, சிவப்பு மலர்களால் மாலையும், அர்ச்சனை செய்து வழிபடுவதும் கோரிய பலனைத் தரும். வாராஹியின் மந்திர அதிர்வுகளை வெளிப் படுத்தும் 'வாராஹி மாலை' மிகச் சிறந்த துதி நூல்.

வளத்தைக் கொடுப்பதில் வாலை என்னும் பாலா தேவி மிகவும் சிறப்பு டையவள். அதைப் போலவே, வலிமை

கிழங்குகளால் துன்பங்களைச் சந்திக் கிறார்கள் மனிதர்கள். அதை உணர்ந்து, என்னைத் தொழும் பக்தர்களின் வினைக் கிழங்குகளை வேரோடு கெல்லி, அவர் களைப் பிறவிச் சுழலிலிருந்து விடுவிப் பேன்' என்று உணர்த்துகிறாள் வாராஹி.

**- வித்யாரண்யன்**





பெயர்: காந்த் சந்திரன்

செய்யும் கலையின் வகை: நவீன சுடுமண் சிற்பம்

துவங்கியது: 96லிருந்து...

ஊர் :மேட்டுப்பாளையம்

கவலை : மனைவி இதை மண் வேலையாகப் பார்ப்பது (அவளைக் குத்தம் சொல்லலை)





# காலேஜில் களிமண் செயின்!

பெருமை:மற்றவர்கள் கலையாகப் பாராட்டுவது.

சந்தோஷம்: எலிசபெத் ராணிக்கு பானையைப் பரிசளித்தது

ஆச்சரியம்: கல்லூரி மாணவிகள் என்னிடம் ஆர்டர் கொடுத்து களிமண் செயின் போடுவது

திட்டம்: குயவர்களுக்கும் பெண்களுக்கும் இந்தச் சுடுமண் கலையை 'வருவாய்' கலையாகக் கற்றுத் தந்து மாற்றுவது.

இடையூறு: நமது களிமண்ணில் இரும்புச் சத்து இல்லாததால் பெங்களூரிலிருந்து களிமண்ணை வரவழைப்பது.

**- சசிகலா**

படங்கள் : **சின்னராஜ்**

**கோவணாண்டி கடிதங்கள் (பாகம் 2 ) வெளியீடு : விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை- 600 002.**

'விவசாயத்தைச் செய்வது மூடத்தனம் என்று நினைக்கும் அளவுக்கு, விவசாயிகளின் வாழ்க்கை பாதிப்படைந்து வருகிறது. இப்படியே போனால், இந்தியா உணவுக்குத் திண்டாட வேண்டிய நிலை ஏற்படும்' என்பதை அழுத்தமாகப் பதிவு செய்திருக்கிறது இந்தப் புத்தகம். கடித முறையில் அமைந்துள்ள இந்த நூல் வெளிப்படுத்தும் அங்கதமும், அவலமும் விவசாயிகளின் நிலையை உணர்த்தி, வாசிக்கும்போதே பதறச் செய்கின்றன.

**மணிமேகலை ஆசிரியர்: என்.சொக்கன் வெளியீடு: கிழக்கு பதிப்பகம், எண். 33/15, எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார்ப் பேட்டை, சென்னை- 18**

சீத்தலைச் சாத்தனாரின் காப்பியமான சிந்தாமணியை, இலக்கிய நயத்துடன் படிப்பது சுவைதான். அதற்கு மொழிப் பயிற்சி அவசியம். அதையே, சுவாரஸ்யமாக- நாவலைப் போலப் படிக்க வைத்திருக்கிறார் ஆசிரியர். புத்த தத்துவங்களையும் சலிப்பில்லாமல் படிக்கச் செய்வது அழகான நடை. கதையாகப் படித்தாலும், காப்பியத்தின் சுவையை அறியச் செய்வதில் வெற்றி பெற்றிருக்கிறார் ஆசிரியர்.

**உத்தப்புரங்களும், சாதியத்தின் அந்தப் புரங்களும் ஆசிரியர்: ப. கவிதா குமார், வெளியீடு: கயல் வெளியீட்டகம், ஈ-1, தமிழ்நாடு வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு, சொக்கிகுளம், மதுரை- 625002**

உத்தப்புரம்...கிராமத்துக்குள்ளேயே ஒரு சுவரை எழுப்பிய மனித அவலத்தை மறக்கவே முடியாது. 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்ற சங்க இலக்கியப் பேச்சும், 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என்ற பாரதி சொல்லும், வெறும் சொற்களாகவே நிலவுகின்றன என்பதை அழுத்தமாகப் பதிவு செய்திருக்கிறார் ஆசிரியர். நேரில் சென்று பார்த்து, பத்திரிகையில் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு. இதைச் சரிப்படுத்தாமல், தேச முன்னேற்றத்தைப் பற்றிப் பெருமை பேசுவதில் அர்த்தமில்லை. வாசித்தவுடன், மனம் கனத்துப் போவது நிஜம்!



# எளிய கடமை இதுவே!

**- ராகவன்**

**வீ**ரநாராயண ஏரிக் கரையின் தென் கோடிக்கு வந்தியத்தேவன் வந்து சேர்ந்தான்.

அன்று பதினெட்டாம் பெருக்குத் திருநாள் அல்லவா? பக்கத்து கிராமங்களிலிருந்து, தந்த நிறத் தென்னங்குருத்துகளால் சப்பரங்கள் கட்டி இழுத்துக் கொண்டு கும்பல் கும்பலாக மக்கள் அங்கே வந்து கொண்டிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் புதிய ஆடைகள் அணிந்து, விதவிதமான அலங்காரங்கள் செய்து கொண்டு வந்திருந்தார்கள். பெண்களின் கூந்தல்களைத் தாழம்பூ, செவ்வந்திப் பூ, மல்லிகை, முல்லை, இருவாட்சி, செண்பகம் முதலிய மலர்கள் கொத்துக் கொத்தாய் அலங்கரித்தன. கூட்டாஞ்சோறும், சித்திரான்னமும் எடுத்துக் கொண்ட பலர் குடும்பங் குடும்பமாக வந்திருந்தார்கள். சிலர் ஏரிக்கரையில் தண்ணீர் ஓரமாக நின்று கொண்டு, சித்திரான்னம் முதலியவற்றைக்



கமுகு மட்டைகளில் போட்டுக் கொண்டு உண்டார்கள். இன்னும் சில தைரியசாலிகள் சிறிது தூரம் தண்ணீரில் நடந்து சென்று வடவாற்றங்கரையை அடைந்து அங்கு நின்றபடி சாப்பிட்டார்கள். குழந்தைகள் சிலர் சாப்பிட்ட கமுகு மட்டைகளைக் கணவாய்களின் ஓரமாய் எறிய, அந்த மட்டைகள் கணவாய்களின் வழியாக ஏரிக்கரைக்கு வெளியே விழுந்தடித்து ஓடிவருவதைக் கண்டு கைகொட்டிச் சிரித்தார்கள். ஆடவர்களில் சில வம்புக்காரர்கள் தங்கள் காதலிகள் கூந்தலில் சூடியிருந்த மலர்களை, அவர்கள் அறியாமல் எடுத்துக் கணவாய் ஓரத்தில் விட்டு ஏரிக்கரைக்கு மறுபக்கத்தில் அவை ஓடி வருவதைக் கண்டு மகிழ்ந்தார்கள்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டு சிறிது நேரம் வல்லவரையன் அங்கேயே நின்று கொண்டிருந்தான். அங்கு நின்ற பெண்களில் இனிய குரலையுடைய சிலர் பாடுவதையும் காது கொடுத்துக் கேட்டான். அவர்கள் ஓடப் பாட்டும், வெள்ளப் பாட்டும், கும்மியும் சிந்தும் பாடினார்கள். மிகுந்த குதூகலத்துடன் பாடினார்கள்.

வந்தியத்தேவன் செவிகளில் இன்ப வெள்ளமாகப் பாய்ந்தன.

- 'பொன்னியின் செல்வன்'
முதல் அத்தியாயத்திலிருந்து...

## கல்வெட்டுகள்





## இரா.தங்கபாண்டியன்

# பொம்மை(ய) சாமி

எல்லா பங்காளிகளும், பங்காளி வகையறாக்களும் வந்து சேர்ந்துட்டார்கள். பொம்மையசாமி பெரிய கும்மிடும், தம்புரான் மாடு ஓட்டமும் களைகட்டி யிருந்தது. மற்ற நாட்களில் சிந்துவாரற்றுக் கிடக்கும் செவக்காடு இன்று ஜெகஜோதி யாக மின்னுகிறது. நாற்பதடி உயரத்தில் பொம்மையசாமி சீரியல் செட்டுகளில் தகதகத்து நிற்கிறார். திருப்பூருக்குப் பஞ்சம் பிழைக்கப் போன பதினைஞ்சு பங்காளிக் குடும்பங்களும் மைக் செட், வானவேடிக்கை, பந்தலுக் கானப் பொறுப்பை ஏற்றிருந்தார்கள். திருவிழாவுக்கு வரும் எல்லோருக்குமான சாப்பாட்டுச் செலவைச் சென்னையிலிருக்கும் பங்காளிகள் ஏற்றுக்கொண்டார்கள். பரமசிவம், அங்கும் இங்குமாய் அலைந்து கொண்டிருந்தார். பதினேழு வருஷங்கள் கழித்து இப்போது தான் பெரிய கும்பிடு நடக்கிறது.

கடைசியாகப் பெரிய கும்மிடு நடந்தபோது பரமசிவம் முழு இளந்தாரி. காலேஜ் படித்துக் கொண்டிருந்தார். சாதி சனத்தில் படித்தவர் என்ற திமிரும் பெரிய வீட்டுப் பையன் என்ற கர்வமும் சேர்ந்திருந்த பருவம்.

முதல்நாள் இரவு தொடங்கி மூன்றாம் நாள் வெளியூர் பங்காளிகளை வழியனுப்புவது வரையில் நடக்கும் பொம்மையசாமி திருவிழாவில், இரண்டாம் நாள் நடக்கும் கபடிப் போட்டிதான் எதிர்பார்ப்பு நிறைந்தது.

எட்டு ஊர் பங்காளிகளும் கபடிப் போட்டிக்குத் தயாராகி வருவார்கள். யார் ஜெயிக்கிறார்களோ அவர்களுக்கே கோப்பை. இந்தக் கோப்பையை ஒரு தடவைக் கூட பரமசிவம் ஊர்க்காரர்கள் வாங்கியது இல்லை.



**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ரூ.5000 மூன்றாம் பரிசு பெறும் சிறுகதை**

''நாமலே போட்டியை நடத்திட்டு கோப்பையையும் வாங்கிக்கிட்டா நல்லாவா இருக்கும்...?'' என்று சொல்லுவோரும் உண்டு.

''போட்டியில ஜெயிக்கத் துப்பில்லை. கழுதை... விட்டுக் குடுக்குதாம் விட்டு'' என்று உசுப்பிவிடுவோரும் உண்டு.

பரமசிவம் கல்லூரி அளவில் கபடியில் கலந்து கொண்டு பரிசு பெற்றது அவர்கள் ஊர்க்காரர்களுக்குத் தைரியத்தைக் கொடுத்தது. எல்லோரும் பரமசிவத்தைப் பற்றியே பேச ஆரம்பித் தார்கள்.

பரமசிவமும் தன் மீது கொண்டுள்ள நம்பிக்கையைக் காப்பாற்ற படாத பாடு பட்டுப் பயிற்சி செய்து கொண்டிருந்தான். மாலை நான்கு மணிக்குத் தொடங்கும் பயிற்சி இரவு எட்டு மணி வரையில் லைட் வெளிச்சத் திலும் நடக்கும்.

இருட்டுக் கட்டிய பிறகு, பின்சாமத்துக்குக் கொஞ்ச நேரத்துக்கு முன்பு பொம்மையசாமி கும்பிடுவது வழக்கம். பொம்மைய சாமிக் கோயில் முன்பாக எல்லோரும் திரண்டார்கள்.

பெண்கள் குலவை போட... மேளம் முழங்க... அர்த்த ராத்திரியில் மயிர் கூச் செரிய எல்லோரும் நின்று கொண்டிருக்க... பூசாரி உடம்பில் பொம்மையசாமி இறங்கி 'திங்கு திங்'கென்று ஆடி... ஆவேசங் கொண்டு கத்தி... வியர்த்து விறுவிறுத்து மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கி சற்றே நின்று... நிதானித்து... அருள்வாக்குச் சொல்லத் தொடங்கினார்.

''பழக்க வழக்கம் சரியில்லைடா...



நாக்குச் சுத்தம்... மனசுச் சுத்தம் ரெண்டும் கொறையுதடா...''

''காலத்துக்குத் தகுந்த மாதிரி மாறித் தானே ஆகணும் சாமீ.. மாறாட்டி பொழக்க முடியாதே...''

''சொல்லுறதுக்கெல்லாம் பதிலு சொல்லாதீங்கடா...

''மனசெக் கெடுத்திட்டு அலையாதீங் கடா மக்கா...''

''தப்புன்னா சொல்லுங்க சாமி, திருத் திக்கிறோம்.... எங்களைக் காப்பாத்த உங்கள விட்டா யாரு இருக்கா...''

''மன்னிச்சுக்கோ சாமி... எங்களையும் எங்கப் பிள்ள குட்டிகளையும் காப்பாத்து சாமீ.... காப்பாத்து சாமீ......காப்பாத்து சாமீ.....'' என்று சொல்லிக் கொண்டே ஒட்டு மொத்த சனமும் தரையில் விழுந்து கிடந்தது.

சாமி முன்னை விட ஆக்ரோஷ மாக ஆடியது. கண்ணை உருட்டி விழித்து... நாக்கை மடக்கிக் கடித்து... ''ஹேய்ய்...'' என்று ஒரு அதட்டு அதட்டியது. அதிர்ந்து பேசாத... அப் பாவியான பூசாரி, அருள் இறங்கும்போது மட்டும் தமது இன்னொரு ரூபத்தைக் காட்டுகிறார். ஒவ்வொருவருக்குள்ளும் இது மாதிரியான பல ரூபங்கள் இருக்கு போல...

சாமியின் கோவம் கொஞ்சங் கொஞ்ச மாகக் குறையத் தொடங்கியதும், ''நல்லா இருங்கடா மக்கா'' என்று சொல்லி விபூதியை அள்ளி எல்லோருக்கும் பூசி விட்டது.

**எ**ட்டூர்களைச் சேர்ந்த அணிகளும் நான்கு ஜோடிகளாகப் பிரிக்கப்பட்டு கபடி விளையாடின. பரமசிவம் அணிக்குச் சம மாக மதிக்கப்பட்ட புதூர் அணி முதல் சுற்றிலேயே மலங்காட்டு அணியிடம் தோற்று ஆட்டத்திலிருந்து வெளியேறியது. பரமசிவம் அணிக்கு ஏகச் சந்தோசம். போனமுறை புதூர்காரங்கதான் ஜெயித்துப் பரிசு வாங்கினாங்க. ''நீங்கெல்லாம் .... திங்கத்தாண்டா லாயக்கு.... புதூர்க்காரன் மூத்திரத்தைக் குடிங்கடா.... எரும மாடு களா...'' என்று பரமசிவத்தின் அய்யா ஏகத்துக்கு அசிங்கமா பேசியது நினைவுத் தட்டியது.

எப்பிடியாவது புதூர்காரங்களை ஜெயிக்கணும் என்பதுதான் பெரிய கௌர வப் பிரச்னையாக இருந்தது. ஆனால், அதற்கெல்லாம் வேலையில்லாதது போல புதூர் அணி எடுத்த எடுப்பிலேயே



வெளியேறி விட்டது.

கிட்டத்தட்ட கோப்பை கைக்கு வந்து விட்ட சந்தோசத்தோடு உடம்பில் மண் ஒட்டாமல் விளையாடினார்கள்.

''சும்மா விட்டுப் பிடிக்கிறாங்கடா.. ஃபைனல்ல ஒரு விறுவிறுப்பு இருக்கணு மில்லை..... பரமசிவம் போனா எல்லாத் தையும் அள்ளிக்கிட்டு வந்துருவான் பாரு...'' என்று சொல்லிக்கொண்டிருக் கும்போதே எதிரணியில் ஏழுபேர் இருக் கும்போது சர்வ சாதாரணமாக மேலேறி பரமசிவம் போனஸ் கோட்டைத் தொட்

டார். நடுவர் போனஸ் புள்ளியை தனது பெருவிரல் தூக்கி அறிவிக்க ஏகத்துக்கும் கரகோஷம். மேலும் மேலும் புள்ளிகள் எடுக்கும் நோக்கத்தோடு இடது பக்கமும் வலது பக்கமும் மாறிமாறி ஏறி பாடிக் கொண்டிருந்த பரமசிவம், எதிர்பாராமல் நடுப்பகுதியில் ஏற... கண்ணிமைக்கும் நேரத்தில் ஏழுபேரும் ஒட்டுமொத்தமாக வட்டமிட்டு பரமசிவத்தை போனஸ் கோட்டிலேயே கோழிக்குஞ்சை அமுக்கு வதுபோல அமுக்கி விட்டார்கள்.

அப்போது வெளியேறிய பரமசிவத்தை கடைசி வரையில் உள்ளே அழைக்க முடியவில்லை. மலங்காட்டு அணியினர் லாகவமாய்த் தடுப்பாட்டம் ஆடிக் கொண்டே தங்களின் புள்ளிகளை உயர்த் திக் கொண்டார்கள். அப்போது ராமராஜ் ரூபத்தில் அந்த கோரச் சம்பவம் நடந்தது.

எல்லைக்கோடு போடுவதற்காக வைத் திருந்த சுண்ணாம்புத்தூளை பையோடு தூக்கி மலங்காட்டு அணியினர் மீது கொட்ட..... சுண்ணாம்புத் தூள் பட்டதால் பாவம் பசங்கள் துடிதுடித்துப்போக..... கூட்டம் கலகலத்து ஓடி, பின் சுதாரித்து என்ன நடந்தது என யோசிக்கையில் ''அட நாயிகளா.... ஒங்க ஈன புத்தியக் காட்டிட்டீங்களே....'' என்று மலங் காட்டுக்காரர்கள் கூச்சல் போட..... எல்லா ஊர்க்காரர்களும் அடித்த அடியில் ராமராஜ் மூச்சுப் பேச்சில்லாமல் கிடக்க ''ராம ராஜை மலங்காட்டுக்காரங்க கொன்னுட் டாங்க...'' என்ற வதந்தி பரவி யார் யாரை அடிப்பது என்று தெரியாமல் எல்லோரும் அடித்து... அடிவாங்கி.. ஊரே ரத்தக் களறியானதை பொம்மையசாமி மட்டும் மௌன சாட்சியாய்ப் பார்த்துக் கொண்டி ருந்தார்.

தன்னுடைய வாரிசுகள் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டிருப்பதை யார் மீது அருளிறங்கிச் சொல்வது? மெய்யாகவே சாமி கல்லாகிப்போனது.

பதினேழு வருடங்கள் முடிந்து போனது. பூசாரி செத்து, ராமராஜ் செத்து, பரமசிவத்தின் அய்யா செத்து, ஒரு தலைமுறையே செத் துப்போய்.... ஆடு மேச்சவன், மாடு மேச்ச வன், விவசாயம் செய்த வன், கல்லூரியில் படித் தவன் என எல்லாப் பங்காளிகளும் திசைக் கொருவராய்ச் சிதறிப் போனார்கள்.

பழசை மறந்து பெரிய கும்பிடு நடத்த வேண்டும் என்பதில் ஊருக்கு நாலுபேருக் காவது ஆசை இருக்கத்தான் செய்தது. அது பல்கிப் பெருகி எல்லோருக்குமான ஒரு மித்தக் கருத்தாக பதினேழாண்டுகளாகி விட்டது. இதில் பரமசிவத்தின் பங்கு மிகப் பெரியது. ''மனுஷன் இந்த ரெண்டு வருஷமாத் தூங்கலையேடா... எப்பப் பார்த்தாலும் பொம்மையசாமி.... பொம் மையசாமின்னு தானே கெடந்தான். ஊரு ராய்ச் சுத்தி எல்லாத்தையும் பேசி... சம் மதிக்க வெச்சு... நாள் குறிச்சு, காப்புக்

### 24 மொழிகள் 24 பாடகர்கள்

ஏ.ஆர்.ரஹ்மான் இசையில் உருவான 'வந்தே மாதரம்' போன்ற தேசப்பற்று பாடல் ஒன்று 'ஈசல்' படத்தில் இடம் பெறுகிறது. இப்பாடலில் இந்திய மொழிகளில் 24 நான்கு மொழிகளிலிருந்து வார்த்தைகளைப் பயன்படுத்தி எழுதியிருக் கின்றனர் மாஸ் வெங்கட், ராய்... என்ற இரு கவிஞர்கள். இப்பாடலின் மலையாள வரிகளை நடிகர் பார்த்திபனும் தமிழ் வரிகளை கேரள நடிகர் சுரேஷ் கோபியும் பாடியிருக்கின்றனர்.

இருபத்து நான்கு மொழிகளிலிருந்து உருவான இப்பாட லைப் பாடிய பாடகர்களின் எண்ணிக்கையும் இருபத்துநான்கு. ''கின்னஸ் ரெக்கார்டுக்காக இம்முயற்சி'' என்கிறார் ஈசல் படத்தின் இயக்குநர் விஜய் ஆதித்யா.

- அனிதா

கட்டி,.... யே...யப்பா எம்புட்டு வேலை? கம்மாக்கரையில் உக்காந்து வெளிக்குப் போறப்பக்கூட செல்ஃபோனுல "நீங்க என்ன செய்யிறீங்கன்னு" தானே கேட்டான். அவன் ஒழைப்புக்குப் பலன் கெடைக்கணும்" என்று அழகுத்தாய் டீக்கடையில் உட்கார்ந்து பாப்பையா சொல்லுவார்.

ஒரு சிறு அசம்பாவிதம்கூட நடந்து விடக்கூடாது என்பதில் பரமசிவம் கவனமாய் இருந்தார். "இந்த வருசம் கபடிப் போட்டி வேண்டாம்" என்று ஒதுக்கினார். "நாடகமெல்லாம் யாரு பாப்பா" என்று சிலர் மலைத்தபோது, "ஆடலும் பாடலும் ஏற்பாடு செய்யலாம்" என்றார்.




பொம்மையசாமி முன் கூட்டம் கூடியது. திருப்பூருக்குப் பஞ்சம் பிழைக்கப் போயிருந்த பூசாரி மகன் மீது அருள் இறங்கியது. ஓர் உலுப்பு உலுப்பி ஆடியவன் அருள்சொல்ல முடியாமல் விக்கி விக்கி அழுதான். "சாமீ... குத்தம் செஞ்சுட்டோம் சாமி... எங்களை மன்னிச்சு ஏத்துக்கிடணும்"' என்று நெடுஞ்சாண் கிடையாக எல்லோரும் தரையில் விழுந்தனர். 'கோட்டுப்' போட்டவன், 'சூட்டுப்' போட்டவன், 'குண்டு' போட்டவனெல்லாம் நோஞ்சான் பூசாரி மகனின் வார்த்தைக்காக ஏங்கிக் கிடந்தனர்.

"அருள் குடுக்காட்டியும் பரவாயில்லை... எங்களை மன்னிச்சு விபூதி போட்டுச் சக்திக் குட்டி வெட்ட உத்தரவு குடு சாமீ..." என்று பூசாரியின் காலில் விழுந்து நிலைமையை பரமசிவம் சமாளித்தார்.

எல்லோரும் விழுந்து விழுந்து கும்பிட்டு விபூதி வாங்கினார்கள். 'சக்தி குட்டி' வெட்டியதும் சமையலுக்கான பொதுக்கிடாய்கள் வெட்டப்பட்டன. ஒரு பக்கம் கிடாய் வெட்டுவதும் மறுபக்கம் வெட்டிய கிடாய்களை உரிப்பதுமாக அந்த செங்கமங்கலான நேரம் கவிச்சி வீச்சமெடுத்துக் கொண்டிருந்தது. அண்டா அண்டாவாகக் கறியும் சோறும் தயாராகிக் கொண்டிருந்தது.

காலை ஒன்பது மணிக்கெல்லாம் கறியும் சோறும் தயாராகி அன்னதானம் தொடங்கியது. ரெண்டாயிரம் பேருக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த உணவைப் பரிமாறத் தொடங்கினார்கள். பந்திகளில் எச்சில் இலை எடுத்துப்போடுவதற்கு ஒவ்வொரு பந்திக்கும் ஒவ்வோர் ஊர் பங்காளிகள் நேர்ந்திருந்தனர். ஒவ்வோர் ஊரின் பெரிய தலைகள் வரும்போதெல்லாம் பரமசிவம் வளைந்து குனிந்து பவ்யம் காட்டி வணங்கினார்.

சாப்பாடு முடித்துத் தூங்கி எழுந்து சாயங்காலம் ஆடலும் பாடல் துவங்கியது. ஆடவந்த நடிகைகள் 'ஏற்ற இறக்கங்களோடு' ஆட, பெரியவர்கள் முகம் சுளித்தபோதெல்லாம் பவ்யம் குறையாமல்

பக்கத்தில் சென்று வளைந்து குனிந்து, ''எளந்தாரிப் பிள்ளைக சந்தோசமா பார்க்க விரும்புறாங்க... நடக்கட்டுமே.. ஊரு ஒலகத்துல நடக்காததா...?'' என்று சமாதானம் சொன்னார் பரமசிவம்.

யாருக்கெல்லாம் 'தாகம்' எடுக்கிறதோ... அவர்களின் குறிப்பறிந்து 'அதற்கும்' 'ஏற்பாடு' செய்திருந்தார். எல்லாமே நல்லபடியாக முடிந்தது.



''நான் குழம்பு வைக்க ஆரம்பிச்சதுமே ஏழெட்டு குழம்பு பேரை வரிசையா என்கிட்டே வந்து சொல்றீங்களே, எதுக்கு?''

''நீ குழம்பு வைச்ச பின்னாடி இதிலே ஏதாவது ஒரு நல்ல பேரா 'செலக்ட்' பண்ணி அதுக்கு வைச்சுடு!''

- அரூர் மு.மதிவாணன்

மறுநாள் காலையில் வெளியூர் பங்காளிகளை வழியனுப்புதல் நடந்தது.

திருவிழாவைச் சிறப்பாக நடத்த உதவி செய்ததற்காக சால்வை போத்தி நன்றி சொன்னார் பரமசிவம். ''பரமசிவம் நாலு வார்த்த பேசப்பா...'' என்று புதூர்கார பெரியாம்பிளை சொன்னார்.

இந்தச் சந்தர்ப்பத்துக்காகவே காத்திருந்தவர் போல பரமசிவம் தொண்டையைக் கனைத்து, துண்டை சரிசெய்து பேசத் தொடங்கினார், ''எல்லாம் நல்லபடியா முடிஞ்சது. அதுக்கு ஒங்களுக்கு என்னோட மனமார்ந்த நன்றி. பொம்மையசாமி பரம்பரை எங்க இருந்தாலும் ஒத்துமையா இருக்கணும். ஒத்துமையா இருப்போம். நம்ம பிள்ளைகள் இப்ப படிப்படியா முன்னேறிக்கிட்டு இருக்காங்க. நாம ராஜாங்கம் பண்ணுறதுக்குத் தகுதியானவங்க. இதுல யாருக்கும் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. இருக்கவும் கூடாது'' என்று சொல்லி நிறுத்தினார். எல்லோரும் அவரது கருத்தை ஏற்றுக்கொள்வது போலொரு முகப்பாவனையில் அமைதியாக இருந்தனர். தகுந்த இடைவெளி விட்டு மீண்டும் பேசத் தொடங்கினார். ''வர்ற தேர்தல்ல எங்க கட்சியில எனக்கு இந்தத் தொகுதியில போட்டியிட வாய்ப்புத் தர்றாங்க. ஏறக்குறைய எல்லாப் பேச்சு வார்த்தையும் முடிஞ்சிருச்சு. இந்த ரெண்டுநாளா காட்டுன ஒத்துமை ஆர்வத்தை நீங்க தேர்தல்லயும் காட்டுவீங்கன்ற நம்பிக்கை எனக்கு இருக்கு. அது மட்டும் பத்தாது. செலவுக்குப் பணம் தேவைப்படுது. அதுக்கும் ஏற்பாடு செய்யணும். நம்ம சனத்துல ஒருத்தர் அரசியல்ல பெரிய லெவலுக்கு வரணும்ற ஆசை எல்லாத்துக்குள்ளேயும் இருக்கு. அது நானா இருந்தா ஒங்களுக்கு சந்தோசம் தானே'' என்று வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்துப் பேசிக்கொண்டே சென்றார்.

பரமசிவம் அரசியல் பேசுறதை உள்ளூர்காரங்களோட சேர்ந்து பொம்மையசாமியும் பார்த்துக் கொண்டிருந்தது. இப்போது மட்டுமல்ல... அன்னக்கி ராமராஜ் சுண்ணாம்புத் தூளை கொட்டும் போதும்தான்!



# அருள்மிகு

ஐ.எஸ்.ஓ. நிறுவன தலைவர் அவர்களுக்கு,

திரிபுரசுந்தரி சமேத வேதபுரீஸ்வரர் அனேக ஆசீர்வாதம். மைலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலுக்கு ஐ.எஸ்.ஓ.9001 சான்றிதழ் சமீபத்தில் கிடைத்ததை முன்னிட்டு இக்கடிதம் எழுதுகிறேன்.) தங்களின் ஐ.எஸ்.ஓ. அங்கீகாரம் கிட்டாததால் என் திருநாமத்தின் முன் 'அருள்மிகு' என்பதைப் போடக்கூட ஒப்புக் கொள்ள மாட்டேன் என்கிறார்கள்.

கும்பகோணத்துக்குக் கிழக்கே இருபது கிலோ மீட்டர் தூரத்தில் புராதன காலத்தில் சுயம்புவாகத் தோன்றிய நான் அப்போதைய முனிவர் ஒருவருக்குச் சாப விமோசனம் நல்கி முக்தியும் அளித்ததில் ஆரம்பித்து, இன்றளவும் இந்தக் கோயிலைத் தேடிக் கண்டுபிடித்து ஒரு நாளைக்கு இரண்டு ட்ரிப்புக்களே பஸ்ஸில் வந்து போகும் பக்தர்களுக்கு, என்னாலான அருளை வழங்கிக் கொண்டுதான் இருக்கிறேன். 1009 வருடங்களுக்கு முன்னால் கட்டப்பட்ட பிரம்மாண்டமான கோயிலில் நானும், திரிபுரசுந்தரியும் இந்த நோஞ்சான் குருக்கள் சுவாமிநாதனுடன் கொட்டுக் கொட்டென்று உட்கார்ந்திருப்பதால் தேடி வரும் ஓரிரு பக்தர்களைக் கவனிக்க நிறைய அவகாசம் இருக்கிறது. ஆகவே, அவர்களின் குறைகளை உடனுக்குடன் நிவர்த்திச் செய்வதில் ஒரு குறையும் வைப்பதில்லை. குறைந்தபட்சம் ஒரு கற்பூரம் காட்டக்கூட சக்தியில்லாமல் வந்துபோகும் பக்தர்களுக்கும் பாரபட்சமின்றி அருள் பாலித்தே அனுப்புகிறேன்.

குடும்பப் பிரச்னை, தீராத வியாதி, வியாபாரத்தில் நஷ்டம், திருமணத் தடை, தம்பதிகளுக்குள் விரிசல், வேலை வாய்ப்பு என என்ன வேணும்னாலும் கேட்டு குறையோடு வந்தாலும் உடனடியாக பைசல் செய்வது எங்கள் ஸ்பெஷாலிடி

என்று இங்கு வருபவர்களின் நம்பிக்கை. உங்களுக்கு நம்பிக்கை ஏற்பட வேண்டுமென்றால் சென்ற வெள்ளிக்கிழமை இஞ்சினியரிங் கௌன்சிலிங் போய் வந்த நாகப்பட்டினம் சார்ந்த, மூல நட்சத்திரம் கௌசிக கோத்ரம் கூடிய வேதமூர்த்தியைக் கேட்டறியலாம். அவனுக்கு ஃப்ரி ஸீட் கிட்டியது என் அருளால்தான். எங்கள் கோயில் குளத்தில் குழந்தை வரம் வேண்டி ஒரு மண்டலம் நீராடின மகேஸ்வரி (சதயம், பாரத்வாஜ கோத்ரம், பசுபதி அக்ரஹாரம்) இப்போது முழுகாமல் இருப்பதும் மற்றொரு சான்று.

கோயிலில் அதிகக் கூட்டம் இல்லாத

# ஐ.எஸ்.ஓ.9001

தால் உட்பிரகாரம், வெளிப்பிரகாரங்கள் மிக சுத்தமாகத்தான் இருக்கின்றன. கூட்டம் வராத அதே காரணத்தினால் அத்தி பூத்தாற் போல் எனக்குச் செய்யும் ஓரிரண்டு அர்ச்சனைகளையும் சுவாமிநாத குருக்கள் ஐ.எஸ்.ஓ. தரத்துடன் மந்திரங்களைச் சப்தமாகச் சொல்கிறார். வசூல் இல்லாததால் ரேஷன் அரிசியில் செய்த நைவேத்யத்தைச் சகித்துக் கொண்டு, இத்தனை பொறுமையுடன் அருள்பாலிப்பதில் மட்டும் குறை வைக்காமல் இருப்பதற்காகவே நீங்கள் எனக்குச் சான்றிதழ் தரலாம்.

நிற்க, மூட்டு வலியால் சென்ற மூன்றாண்டுகளாக நிற்கவும், நடக்கவும் முடியாமல் அவஸ்தைப்படும் தங்கள் மனைவியோடு என் கோயிலுக்கு ஒரு நடை வந்துவிட்டுப் போகவும். உங்கள் மனைவி நடப்பது நடந்தே தீரும்.

அப்போதாவது உங்கள் ஐ.எஸ்.ஓ.9001 சான்றிதழை நான் 1009 ஆண்டுகளாக உறைந்திருக்கும் இக்கோயிலுக்கும் அருளி ஒரு சுகத்தையும் அனுபவிக்காமல் அருள் பாலித்துக் கொண்டிருக்கும் என் வாழ்க்கையில் ஒளி ஏற்றுவீர்களாக!

பணிவன்புடன்,
திரிபுரசுந்தரி சமேத வேதபுரீஸ்வரர்
(செல், தொலைபேசிகூட இல்லாத
ஐ.ஓ. பாவம் கோயில்)
தரித்திரபுரம் அஞ்சல்,
கும்பகோணம்.

''தமிழ்ப் பாடத்தை ஏண்டா சிவப்பு மையால் எழுதறே.''
''தமிழ் செம்மொழி ஆச்சே!''
– எஸ்.மோகன்



ஜாலி ஸ்டோர்ஸ்

## தவளை என்பது தவளையா?

உற்றுப்பார்த்துக் கொண்டு
ஒரு மூலையில்
உட்கார்ந்திருந்தது
உயிரிருப்பதன்
சாட்சியாய்
துடித்துக்கொண்டிருந்தது
கீழ் தாடை
எகிறி விடுமோ
என்ற
பயத்துடனே
குளிக்க வேண்டியதாயிற்று

வெளியில்
வந்த பின்னும்
ஒட்டிக்கொண்டிருந்தது
ஓர் உறுத்தல்

அலுவலகம்
விட்டு வந்து
அவசரமாய்
திறந்து பார்த்ததில்
வெளியே போய்விட்ட
நிம்மதி

அன்று முதல்

தவளை வெளியேறிவிட்ட
அன்றிலிருந்து
குளியலறையில்
நிரந்தரமாய்
தங்கிவிட்டது

தவளை பயம்

- க.ஆனந்த்

## தண்டனை

என்
பாடப்புத்தகத்தை
தலைகீழாய்ப் பார்க்கிறாள்
கைரேகையிடும் அம்மா

அவளுக்குக் கற்க, எழுத
தெரியாத எழுத்துகள்
பாவம்
தொங்குகின்றன
வெளவால்களைப்போல்...

- செழியரசு

## காதல் வினை

உரமேறிய 'திமிலங்கல்'மாய்
செருக்குடன் சுற்றிய என் 'நான்'..
ஏதோவொரு இனிப்பான
மாயையை
காதலென்ற புனைப்பெயரில்
என்னுள்
கலந்துவிட்ட பொழுதிலிருந்து
உருமாறிப் போனது -
தன்னைத் தானே பிரித்துக்
கொள்ளும்
'அமீபா'வாக....

- தே.ரம்யா

# கவிதை கஃபே

## அடையாளம்

உனக்குப் பிடிக்காதென
லிப்ஸ்டிக்கையும்
உனக்கு விருப்பமில்லையென
ஸ்டிக்கர் பொட்டையும்
நீ மறுத்து விட்டாயென
சுடிதாரையும் மாற்றி
பின்னலிட்டுப் பூச்சூடி, நெற்றியில்
குங்குமமிட்டு
பட்டுப் புடவையணிந்து
நான் மாறிய போது
உன்னில் தொலைந்தன
என் அடையாளங்கள்

– சித்ராகென்னடி

ஒரு அடிகூட விழவில்லை
விழுந்து புரண்டு அழுகிறது
சொட்டு நீர் கூட வரவில்லை
இருந்தும்
சாதித்து விடுகிறது தான்
எண்ணியதை.

– கே.எஸ்.கிருஷ்ணவேணி

வாசகர்களே! உங்க க்யூட் கவிதைகளைச் சீக்கிரமா 'கவிதை கஃபே'ன்னு குறிப்பிட்டு
அனுப்புங்க... kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

# அலைமோதும்

அதிகாலை இரண்டு மணிக்கெல்லாம், திருவானைக்காவல் அகிலாண்டேஸ்வரி அம்மன் சன்னதி வாசலில் திரளத் தொடங்கி விடுகிறது பெண்கள் கூட்டம். இதற்கு அவர்கள், தங்கள் இருப்பிடங்களிலிருந்து எத்தனை மணிக்குக் கிளம்பியிருக்க வேண்டும்?

ஈரக் கூந்தலில் நீர்த்துளிகள் சொட்டச் சொட்ட, பெண்களுக்கு உதயப் பொழுதின் முன்பாக அம்மனைத் தரிசிப்பது, ஈடில்லா ஆனந்தம்.

ஆடி வெள்ளிக்கிழமைகளில், ஒரு லட்சம் பெண்கள் திரளும் கூட்டம், தமிழகத்திலேயே வேறு எந்தக் கோயில்களிலும் இல்லை. அகிலம் காத்தருளும் திருவானைக்காவல் அன்னை அகிலாண்டேஸ்வரி அன்னையின் கனிவான அருள் பார்வை தரிசனம் பெரும்பேறு. அதுவும் ஆடி மாத தரிசனம் ஆயுளின் கடைசி வரைக்கும் நம்மைக் காத்து வரும் என்று பக்தர்கள் நம்புகின்றனர்.

"பத்து வயதுச் சிறுமியாக இருந்த போது, என் அம்மாவோடு நான் தரிசித்த அம்மனின் அருள் பார்வை, இன்னமும் என் மனசை விட்டு அகலவே இல்லை. இப்போ எனக்கு வயது ஐம்பது. இப்பவும் என் அம்மாவின் கைப்பிடித்தே அம்மனின் சந்நிதிக்கு வருவதாக ஆத்மார்த்தமாக உணர்கிறேன்! சாதாரணமாக இருந்த எங்களை, வாழ்வில் மிகவும் உயர்த்தி விட்டவள் அன்னை அகிலாண்டேஸ்வரி. எந்த அளவுக்கு தெரியுமா? அம்மன் சன்னதியின் தங்கத் தேர் உலாவுக்கு, அகிலாண்டேஸ்வரி உட்பட சுவாமி விக்கிரகங்களை ஐம்பொன்னினால் செய்து தருமளவுக்கு!" எனக் கண்களில் நீர் பனிக்கக் கூறுகிறார் சுலோசனா சந்தானகோபால


* சுலோசனா




* அர்ச்சகர்

# ஆடிக்கூட்டம்!

கிருஷ்ணன்.

அதிகாலை 3.45 மணிக்கு, (ஆடி வெள்ளிக்கிழமை களில் மட்டும்) கோயில் நடை திறக்கப்படுகிறது. கார்த்திகை கோபுர வாசலி லிருந்து தொடங்கு கிறது க்யூ. மீனாட்சி சுந்தரேஸ்வரர் சன்னதி இடதுபுறம் திரும்பி, ஊஞ்சல் மண்டபம் வழியாக வந்து, மூன்றாம் பிராகாரத்தில் சனீஸ்வரர் சன்னதி அருகில் வளைந்து சென்று மேடையில் ஏறி (நீண்ட மேடை பிரகாரம்), கீழிறங்கி விநாயகர் சன்னதி வழியாக அம்மன் சன்னதி வந்தடைகிறது வரிசை. பல நேரங்களில் கார்த்திகை கோபுர வாசலுக்கு வெளியேயும் வரிசையின் முகப்பு தொடங்கி, சன்னதி வீதிகளிலும் அதன் வரிசை விரிவடைந்திருக்கும்.





ஆடி வெள்ளிக்கிழமைகளில் மட்டும் அதிகாலை நான்கு மணி முதல் நள்ளிரவு பன்னிரண்டு மணி வரை அம்மன் தரிசனம் உண்டு.

**ஆடி வெள்ளிக்கிழமை மட்டும் அதிகாலை நான்கு மணி முதல் நள்ளிரவு பன்னிரண்டு மணி வரை அம்மன் தரிசனம்**

''தாமரை மலர் பீடத்தில் நின்ற திருக்கோலத்தில் வீற்றிருக்கும் அம்மன் மிகவும் விசேஷமானவள். ஆடியில் அமாவாசை, பௌர்ணமி, பூர நட்சத்திரம் இதில் ஏதேனும் ஒன்று வெள்ளிக்கிழமையன்று இணைந்து வந்தால், அன்று மட்டும் இரண்டு லட்சத்துக்கும் மேலாக பெண்கள் இங்கு திரண்டு வருகின்றனர்!'' என்கிறார் அகிலாண்டேஸ்வரி அம்மன் சன்னதி அர்ச்சகர் சுப்பிரமணிய பண்டிதர். ●

## மூலதன மந்திரம்



**த**ங்கத்தின் விலை உயர்ந்து கொண்டே போகின்றதே! வாங்கலாமா? வேண்டாமா? இன்னும் ஏறுமா அல்லது இறங்கிவிடுமா?

-ஜி.ராஜேஷ்,
அயன்புரம்

**க**டந்த நாற்பது வருடங்களில் தங்கத்தின் விலை எவ்வாறு இருந்தது என்று பார்த்தால் இதற்கு ஒரு முடிவுக்கு வரலாம். பார்த்த பிறகே சொல்லமுடியும். ஏனென்றால் தங்கத்தின் மதிப்பு ஒவ்வொரு நாட்டின் கரன்சியின் (பணத்தின்) மதிப்பைப் பொறுத்தே உள்ளது. ஒரு நாட்டின் கரன்சியின் மதிப்போ பல விஷயங்களை உள்ளடக்கியது. தங்கமோ உலகத்தில் எந்த மூலையிலும் விலைபோகக்கூடிய ஒரு பொருள்.

எனவே, தங்கத்தின் மதிப்பை உலகத்தில் எல்லா இடத்திலும் விலை போகக்கூடிய, அனைவருக்கும் தேவையான மற்றொரு பொருளின் விலையுடன் ஒப்பிட்டுப் பார்த்த பின்னரே முடிவு செய்ய முடியும். அப்படி அனைவருக்கும் தேவையான மற்றும் உடனடியாக விலை போகக்கூடிய ஒரு பொருள் கச்சா எண்ணெய்தான். 1950-களில் இருந்தே கச்சா எண்ணெயின் விலையும் தங்கத்தின் விலையும் ஒரே மாதிரியான போக்கிலேயே போய்க் கொண்டிருக்கிறது.

# தங்கத்தில் முதலீடு தப்பா?

தங்கத் தின் விலை இந்த நாற்பது ஆண்டுகளில் மூன்று ஆண்டுகளைத் தவிர, மற்ற 37 ஆண்டுகளில் ஒவ்வொரு ஆண்டிலும் உயர்ந்து கொண்டேதான் வந்திருக்கிறது. அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில், 1970-71 முதல் 2009-10 (ஜூன் மாதம் வரை) இருந்த வருடாந்திர சராசரி 10 கிராம் தங்கத்தின் மதிப்பு கொடுக்கப்பட்டுள்ளது.

**ஜூ**ன் 2010-ல் 10 கிராம் தங்கத்தின் விலை: ரூபாய் 17,900 என்றிருக்கிறது. இதனைப் பார்த்தபின், தங்கத்தில் முதலீடு கட்டாயம் செய்ய வேண்டாமா என்று கேட்பீர்கள் அல்லவா? இதற்கான விடையை வேறு சில விஷயங்களைப்

உதாரணத்திற்கு, 1970-ல் ஒரு பவுன் தங்கத்தை விற்று எவ்வளவு கச்சா எண்ணெய் வாங்க முடிந்ததோ சுமார் அதே அளவுக்கு இன்றுவரை கிட்டத்தட்ட வாங்க முடிகிறது. இந்திய ரூபாயின்

**உங்கள் கேள்விகளை 'மூலதன மந்திரம்' என்று குறிப்பிட்டு அனுப்பலாம். KAFIN என்று டைப் செய்து, ஒரு ஸ்பேஸ் விட்டு, கேள்வி, பெயர், ஊர்**

மதிப்பில் 1970ல் ரூபாய் 23.73க்கு கிடைத்த கச்சா எண்ணெய் எண்ணெய், பீப்பாய் ஒன்று இன்றைக்கு ரூபாய் 3,542க்கு கிடைக்கிறது. அதே சமயத்தில் 1970-ல் ரூபாய் 64.85-க்கு கிடைத்த ஒரு பவுன் தங்கம் இன்று ரூபாய் 13,760-க்கு கிடைக்கிறது. கச்சா எண்ணெயின் விலை ஏற்றம் (க்யுமுலேட்டிவாக) கிட்டத்தட்ட 13.3 சதவிகிதமும், தங்கத்தின் விலையேற்றம் (க்யுமுலேட்டிவாக) கிட்டத்தட்ட 14.33 சதவிகிதமும் கடந்த காலத்தில் அதிகரித்து வந்திருக்கிறது.



## டி.பாலசுந்தரம்

இதைத் தவிர, தங்கத்தின் விலையை ஒவ்வொரு நாடுகளின் நாணயங்களின் மதிப்பிலும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். அவ்வாறு பார்க்கும்போது இந்திய ரூபாயில் தங்கம் 2001-க்கும் 2008-க்கும் இடைப்பட்ட காலத்தில் வருடம் ஒன்றுக்குக் கிட்டத்தட்ட 14.5 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது. ரூபாயின் மதிப்பில் வருடா வருடம் சராசரியாக 14.5 சதவிகிதம் ஏறியதால், தங்கம் ஓர் ஒப்பற்ற முதலீடு என்ற எண்ணத்தை நீங்கள் மனத்தில் கொள்ளலாம். நீங்கள் கவனிக்க வேண்டிய வேறு ஒரு விஷயம், நல்ல முதலீடு என்பது உங்களுக்கு விலை வாசி ஏற்றத்தையும் தாண்டி ஒரு கணிசமான லாபத்தைத் தரவேண்டும். உங்களுடைய பார்வையை இன்னும் கொஞ்ச நாள் பின்னால் தள்ளிப் பதித்தால் கீழே கண்டுள்ள ஏற்றத்தைத் தான் தங்கம் சந்தித்திருக்கிறது என்பது தெளிவாகும்:

1990-2000-களில் சராசரியாக 3.6 சதவிகிதம், 1980-90-களில் சராசரி 11.3 சதவிகிதம், மற்றும் 1970-80 களில் சராசரியாக 21.5 சதவிகிதம்.

alki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். செல்ஃபோனில்
,கியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.

| வருடம் | ரூபாய் | விலை ஏற்றம் (%) | வருடம் | ரூபாய் | விலை ஏற்றம் (%) |
|---|---|---|---|---|---|
| 1970-71 | 184.96 | --- | 1990-91 | 3451.52 | 6.9 |
| 1971-72 | 200.16 | 8.2 | 1991-92 | 4297.63 | 24.5 |
| 1972-73 | 242.57 | 21.2 | 1992-93 | 4103.66 | -4.5 |
| 1973-74 | 369.33 | 52.3 | 1993-94 | 4531.67 | 10.4 |
| 1974-75 | 519.19 | 40.6 | 1994-95 | 4667.24 | 3.0 |
| 1975-76 | 545.21 | 5.0 | 1995-96 | 4957.60 | 6.2 |
| 1976-77 | 549.82 | 0.8 | 1996-97 | 5070.71 | 2.3 |
| 1977-78 | 637.93 | 16.0 | 1997-98 | 4347.07 | -14.3 |
| 1978-79 | 791.22 | 24.0 | 1998-99 | 4268.00 | -1.8 |
| 1979-80 | 1158.75 | 46.5 | 1999-00 | 4393.56 | 2.9 |
| 1980-81 | 1522.44 | 31.4 | 2000-01 | 4473.60 | 1.8 |
| 1981-82 | 1719.17 | 12.9 | 2001-02 | 4579.12 | 2.4 |
| 1982-83 | 1722.54 | 0.2 | 2002-03 | 5332.36 | 16.4 |
| 1983-84 | 1858.47 | 7.9 | 2003-04 | 5718.95 | 7.2 |
| 1984-85 | 1983.92 | 6.8 | 2004-05 | 6145.38 | 7.5 |
| 1985-86 | 2125.47 | 7.1 | 2005-06 | 6900.56 | 12.3 |
| 1986-87 | 2323.49 | 9.3 | 2006-07 | 9240.32 | 33.9 |
| 1987-88 | 3082.43 | 32.7 | 2007-08 | 9995.62 | 8.2 |
| 1988-89 | 3175.22 | 3.0 | 2008-09 | 12889.74 | 29.0 |
| 1989-90 | 3229.33 | 1.7 | 2009-10* | 16300.00 | 26.5 |

*31 மார்ச் 2010-ல் இருந்த கடைசி விலை

கடந்த மூன்று ஆண்டுகளில் சந்தித்த கிடுகிடு ஏற்றம், உலகளாவிய வங்கிகள் சார்ந்த பிரச்னைகளைச் சமாளிக்க வளர்ந்த நாடுகள் அவற்றின் கரன்சிகளை அதிகபட்ச வேகத்தில் அச்சடித்து வெளியிட்டதனால் ஏற்பட்ட ஏற்றம்தானே தவிர, வேறொன்றுமில்லை. எல்லா நாடுகளும் பிரச்னைகள் வரும் போதும், மக்களைக் கவரும் திட்டங்களைப் போடவும் கரன்சிகளை வேகமாக அச்சடித்து புழக்கத்தில் விடுகின்றன. ஆனால், அதே வேகத்தில் தங்கத்தின் அளவு மார்க்கெட்டில் புழக்கத்தில் வருவதில்லை.

எனவே அரசாங்கங்கள் அசாதாரண சூழ்நிலையில் அதிவேகத்தில் இறக்கிவிடும் கரன்சியின் புழக்கத்துக்கு ஈடாக, புழக்கத்தில் வராத தங்கத்தின் விலை கிடுகிடு என ஏறுகின்றது. இந்தத் தற்காலிக நிலை ஒரு சில ஆண்டுகளுக்கே நீடிக்கும். அரசாங்கங்கள் ஒரு நாள் புழக்கத்தில் இருக்கும் அதிகப்படியான கரன்சியை வாபஸ் பெறும். அப்போது தங்கத்தின் விலை நிச்சயமாய் இறங்கும், அரசாங்கங்கள் அந்த நடவடிக்கையை எடுப்பதற்கான முகாந்திரங்களைச் செய்தாலே, தங்கத்தின் விலை வேகமாகச் சரிய ஆரம்பித்துவிடும்.

'என்ன சார், நாற்பது வருஷத்தில் மூன்று தடவை மட்டுமே இறங்கிய தங்கம் இனி இறங்கவா போகிறது?' என்பீர்கள். பிரச்னை அதுவல்ல; கடந்த நாற்பது வருடத்திலும் தங்கம் சராசரியாக 12.7 சதவிகித ஏற்றத்தையே வருடாந்திரமாக பெற்று வந்தது. இந்த 12.7 சதவிகிதம் என்பது விலைவாசி ஏற்றத்தைச் சமாளிக்கத்தான் போதுமானதாக இருந்தது. அதைத்தான் மேலே சொன்ன கச்சா எண்ணெய் உதாரணம் காண்பிக்கின்றது. ஏற்கெனவே சொல்லியபடி, முதலீடு என்பது பணவீக்கத்தையும் தாண்டி உங்களுக்கு நல்லதொரு பலனைத் தருவதாக இருக்க வேண்டும். ஆகவே, அதைத் தர இயலாத தங்கத்தை ஒரு சூப்பர் முதலீடு என்று நினைத்து அதில் இறங்கிவிடாதீர்கள். வங்கியில் பணத்தைப் போட்டு வைப்பதைவிட, சிறிதளவு அதிக ரிட்டர்னை தரும் ஒரு முதலீடே தங்கம் என்பதை நினைவில் கொண்டு செயல்படுங்கள். எனவே தங்கம் விலைவாசி உயர்வை சமாளிப்பதற்கான ஓர் கருவியாகக் கொள்ளலாமேயொழிய தலை சிறந்த முதலீடாக முதலீட்டாளர்கள் கொள்ளக் கூடாது. ●

## என் 'செல்'லமே!



* எஸ்.கௌரி மீனாக்ஷி

எனது கணவர் வெளிநாட்டிலிருந்து அழகான கலர் மொபைல் வாங்கித் தந்தார். என் மகள் ஜெயஸ்ரீயின் போட்டோ, டான்ஸ் அனைத்தையும் பதிவு செய்திருந்தேன். அருப்புக்கோட்டைக்கு பேப்பர் திருத்தச் சென்றபொழுது திருடு போய்விட்டது. அடுத்து சில மாதங்கள் கழித்து, மற்றொரு மொபைல் வாங்கிக் கொடுத்தார். ஸ்கூலில் பாத்ரூம் சென்ற பொழுது, மேலே உள்ள திண்டில் பர்ஸை வைத்தேன். பர்ஸ் திறந்து, மொபைல் வெஸ்டர்னுள் விழுந்துவிட்டது. நீரில் விழுந்தால் என்னவாகும்? அதுவும் வீணாயிற்று. தற்பொழுது கணவரை மொபைல் கேட்டேன். எனது பையன் மறுபடியும் 'முதலில் இருந்தா' என்கிறான். சாதாரண மொபைலே தற்பொழுது என்னிடம் உள்ளது. ..ம்ம் கலர் மொபைல் கனவிலும் வராது போல.

- எஸ்.கௌரி மீனாக்ஷி, மதுரை



## த.கி.நீலகண்டன்



பண்டைய நாட்களில் அரசர்களுக்குள் அடிக்கடி போர்கள் நிகழும். மக்கள் பயிர்த் தொழிலில் ஈடுபடத் தொடங்கும் மாதமான ஆடி மாதத்தில் போர்கள் நிறுத்தி வைக்கப்படுமாம்! (இந்த நாளின் சீஸ்ஃபயர் போல) அதனால் போர்த் தெய்வமான துர்க்கைக்கு பலிபூசைகள் நிகழ்த்தி, அவள் அனுமதியுடன் மற்ற வேலைகளைக் கவனிக்கச் செல்வதில் ஆடி மாதம் துர்க்கை அம்மனுக்கு உகந்ததாயிற்று. பின்னர் அது மாரியம்மனுக்கு உகந்ததாக மாறியதாக விவரம் அறிந்தவர்கள் கூறுகிறார்கள்.

### ஆடி வீதி

புராதனமானத் தலங்களில் ஆடி மற்றும் தை முதல் தேதியை முன்னிட்டுத் திருவிழாக்கள் நடைபெற்றன. இதற்கு 'அயன உத்ஸவம்' என்று பெயர். இன்றும் திருவண்ணாமலை போன்ற ஸ்தலங்களில் பத்து நாட்கள் கொடியேற்றத்துடன் 'அயன உத்ஸவம்' நடைபெறுகிறது. மதுரையில் ஆடிப் பூர விழா பிராகாரத்திற்கு 'ஆடி வீதி' என்றே பெயர்.




### ஆடி அமாவாசை

முன்னோர்களை வழிபடும் நாள். வேதாரண்யம், இராமேசுவரம் ஆகிய கடற்கரை புண்யஸ்தலங்களில் ஆடி அமாவாசையன்று சமுத்ர ஸ்நானம் விசேஷம். இன்று 'செதலப்பதி' என்று பெயர் மருவி வழங்கும் 'தில தர்ப்பணபுரி'யிலும் ஆடி அமாவாசையை முன்னிட்டு பிதுர்க் காரியங்கள், தர்ப்பணங்கள் செய்யப்படுகின்றன. இராமபிரான் இந்தத் தலத்தில்தான் தன் தந்தை தயரதனுக்கு எள்ளும் நீரும் இறைத்து விதிப்படி பிதுர்க்கடன் செய்ததாகவும் அதனால் இத்தலத்தில் முன்னோர் கடன் தீர்ப்பது விசேஷம் என்றும் ஸ்தல புராணம் கூறுகிறது.

### ஆடிக் கிருத்திகை

முருகனுக்கு உகந்த நாள். காவடி, கரகம் ஆகியவற்றை ஏந்தி குன்றுதோறும் வாழும் குமரனுக்கு விழா எடுத்து மகிழ்கிறார்கள் முருகனடியார்கள். ஆடிக் கிருத்திகையன்று தெப்போத்ஸவம் விமரிசையாக நடைபெறும். ஆடிக்கிருத்திகை என்றாலே திருத்தணிதான் நம் நினைவுக்கு வரும்.

### ஆடிப்பூரம்

அம்பிகைக்கு உகந்த நாள். வண்ண வண்ணக் கண்ணாடி வளையல்களாலேயே அம்பிகையை அலங்கரித்து

பளைகாப்பு' உத்ஸவம் டைபெறுவது ஆடிப்பூரம் ன்றுதான். சிவாலயங்களில் ஆடிப்பூர அம்மன்' என்று விசேஷமாக ஒரு விக்கிரகம் ந்த விழாவுக்கு என்றே டித்து வைத்திருக்கிறார்கள்.

ஆடி மாதம், வாரந் தோறும் வரும் வெள்ளிக் ழமைகளில் மாவிளக்கு டுதல் ஒரு பழைய மரபு. கோயில்களில் மட்டுமின்றி வீடுகளிலும் மாவிளக்கு இடுவது வழக்கம். பச்சரிசியை ஊறவைத்து உலர்த்தி உரலில் இட்டு இடித்து வெல்லம், ஏலக்காய் ஆகியவற்றைக் கலந்து பிசைந்து விளக்கு போன்று உருவம் செய்து அதில் நெய்யிட்டு திரியிட்டு விளக்கேற்றுவது பரம்பரையாக வந்த சம்பிரதாயம். இன்றோ கிருஷ்ணா ஸ்வீட்ஸில் எல்லாம் ரெடிமேடாக (நெய், திரி, மாவு) கிடைத்து விடுகிறது.

ஆடி மாதம் முழுவதுமே சக்திக் கனல் ஜொலிக்கும் மாதம். தீமிதித் திருவிழா, பூச்சொரியல், காவடி, கரகம் என்று ஊர் ஊராய் தெருத் தெருவாய் சக்தி வெள்ளம் பாயும் மாதம். பம்பையும் உடுக்கையும் சிலம்பும் சதங்கையும் ஒலியெழுப்பி, காற்றில் ஒரு தனி அதிர்வை ஏற்படுத்தும் மாதம்.



# ஆடி வா... ஆடி வா..!



ஆடி வெள்ளி, ஞாயிறு ஆகிய கிழமைகளில் பொங்கலிடுதல், கூழ்வார்த்தல் ஆகிய தருமங்கள் தடையின்றிச் செழிக்கும் மாதம். சிறு தானியங்களைக் கொண்டு கூழ் சமைத்து மாரியம்மனுக்குப் படைத்து வழிப்போக்கர்களுக்கெல்லாம் வழங்குவது வழக்கம். இரவில் விடிய விடிய 'கூத்து' நடைபெறும். தமிழகத்தின் பழங்கலைகளில் கூத்து முக்கிய இடம்வகித்தது. 'துணங்கைக் கூத்து' என்பது பழந்தமிழ் கலை நிகழ்ச்சி. வசனத்தில் நடைமுறைத் தமிழ் சரளமாகப் புழங்குவது 'தெருக்கூத்து'. இப்போதெல்லாம் வெறும் 'குத்துப் பாடல்'களே ஆக்கிரமித்துள்ளன. கூத்தும் கூழும் ஆடி மாதத்தின் முத்திரைகள்! ●

தமிழ்நாட்டில் சில காங்கிரஸ் தலைவர்கள் காமராஜர் ஆட்சியை மீண்டும் கொண்டு வருவோம் என்று முழங்கி வருகிறார்கள் அல்லவா? இது குறித்து ராகுல் காந்தியிடம் இளைஞர் காங்கிரஸ் பிரமுகர்கள் கருத்துப் பரிமாறிக் கொண்ட போது, ராகுல், ''காமராஜ் ஆட்சி என்று சொல்லி ஏற்கெனவே மக்களைச் சந்தித்துவிட்டோம். அந்த அணுகுமுறை வெற்றியடையவில்லை. எனவே இனி ''காங்கிரஸ் ஆட்சியைக் கொண்டு வருவோம்'' என்று பிரச்சாரம் செய்யுங்கள்'' என்று சொல்லிவிட்டாராம்.

## ஆடி அன்பளிப்பு

மேல்மருத்தூர் கல்வி நிறுவனங்களில் வருமான வரித்துறை சோதனை நடத்தி ரொக்கப் பணம் கோடி, கோடியாகக் கைப்பற்றியது. உடனே சில இந்து

# பாலிடிக்ஸ் பஜார்

இயக்கங்களின் தலைவர்கள் 'இந்து மத நிறுவனங்களை மட்டும் மத்திய அரசு குறி வைத்துத் தாக்குகிறது. ஆனால் சிறுபான்மையினர் கல்வி நிறுவனங்களைக் கண்டு கொள்வதில்லை' என்று அறிக்கை விட்டனர். அப்படி அறிக்கைவிட்ட தலைவர்களை அழைத்து கனமாகவே நன்றி சொன்னார்களாம். இதற்கிடையில் வருமான வரித்துறையினர் நாடு முழுவதும் நடத்திய கல்வி நிறுவனம் தொடர்பான சோதனைகளில் சிறுபான்மை கல்வி நிறுவனங்களும் அடக்கம் என்கிறார்கள்.



## சூப்பரோ சூப்பர்

தமிழக அமைச்சரவை, அதற்குத் தலைமை வகிக்கும் முதல்வர். இதைவிட அதிக ஆதிக்கம் பெற்றவர் இருக்கிறார்களா? 'உண்டே' என்று 'ஓ' போடுகிறார்கள் தலைமைச் செயலக அதிகாரிகள். ''முதல்வரின் செயலர் ராஜமாணிக்கம், புலனாய்வு உயர் அதிகாரி



ஜாபர்சேட், மத்திய அமைச்சர் ராஜா, கனிமொழி ஆகியோரைக் கொண்ட ஒரு குழு பல்வேறு விஷயங்களில் அரசு எடுக்கும் முடிவுகளில் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்துகிறது'' என்கிறார்கள் அவர்கள். அவர்களின் அஜண்டாவில் ஒன்று, கனிமொழியின் அரசியல் ஏற்றத்துக்கு ஆதரவாக காய்



சேர்ந்த யாருக்கும் சீட்டுக் கொடுக்க வில்லை. இந்த நிலையில் எங்களின் பிரதிநிதியாகத் தமிழக அமைச்சரவையில் இருக்கும் ஆர்காட்டார் வரும் தேர்தலில் போட்டியிடப் போவதில்லை. எனவே, எங்களுக்கு உரிய முக்கியத்துவம் கொடுப் போம் என்று தி.மு.க. உறுதியளிக்க வேண்டும். இல்லையேல் வேறுவிதமாக முடிவெடுக்க வேண்டி வரும்'' என்று நாயுடு சங்கங்கள் முதல்வருக்குக் கடிதம் எழுத இருக்கிறார்களாம்.

## 90 பர்சன்ட் இளமை!

''சுமார் 150 தொகுதிகளுக்கு ஜெயலலிதா முதல்கட்ட பரிசீலனைக்காக வேட்பாளர் களை தேர்ந்தெடுத்துவிட் டார்'' என்று சொல்லுகிறது அ.தி.மு.க. வட்டாரம்.

# அம்மா ரெடி!



இவர்களில் 90 சத விகிதம் பேர் இளை ஞர், இளம் பெண்கள் பாசறை அமைப்புகளைச் சேர்ந் தவர்கள். ஆனால் இதில் ஒரு சிக்கல். அவர்கள் பெற்றோர் கட்சி நிர்வாகி யாகவோ அல்லது எம்.எல்.ஏ., எம்.பி. பதவி வகித்திருந்தாலோ போட்டியிடும் வாய்ப்பை இழப்பார்களாம். எந்த அர சியல் ஏற்றத்தையும் சந்திக்காத குடும்பத்திலிருந்து வந்து, குற் றச்சாட்டுக்களுக்கு ஆளாகாமல் பட்டதாரியாக இருந்தால் வாய்ப்பு நிச்சயமாம். கட்சியின் இளைய வட்டாரம் குஷியான பட படப்பில் இருக்கிறது.

களை நகர்த்துவதாம்.

## வரிந்து கட்டும் நாயுடு சமூகம்

''தேர்தல் வருகிறது என்றாலே பல் வேறு ஜாதிச் சங்கங்கள் தங்கள் செல்வாக்கைக் காட்டும் முயற்சியில் இறங்கும். இதற்கு நாயுடு சமூகம் மட் டும் என்ன விதிவிலக்கா? தமிழ்நாட்டில் நாங்கள் 35 சதவிகிதம் இருக்கிறோம். எப் போதும் எங்களுக்குப் பிரதி நிதித்துவம் அளிக்கும் தி.மு.க. சென்ற பாராளுமன்றத் தேர் தலில் எங்கள் சமூகத்தைச்



- சஞ்சயன்

# நடக்குமென்பா
08.08.2010
முதல்

## மேஷம்

பதவியில் உயர்வும் வீடு மாற்றமும் உண்டாகும் அற்புதமான வாரம். புண்ணியத் தலங்கள் சென்று வருவீர்கள். குழந்தைகள் வழியில் சுபக் காரியப் பேச்சு வார்த்தைகள் நற்பலனளிக்கும். கடன் சுமையிலிருந்து விடுதலை கிடைக்கும். இல்லற வாழ்க்கை இனிப்பாக இருக்கும். எதிர்பார்த்த தொழிலில் முன்னேற்றம் இருக்கும்.

## ரிஷபம்

தடைபட்ட காரியங்கள் அனைத்தும் வெற்றியடையும் ஜெயமான வாரம். உறவினர்களின் வருகையால் உற்சாகம் கூடும். வியாபாரத்திலும் உடல் ஆரோக்கியத்திலும் கணிசமான முன்னேற்றம் இருக்கும். பூர்விகச் சொத்துகள் பாகப் பிரிவினை ஆகும். இல்லற வாழ்வில் அமைதி கிட்டும்.

## மிதுனம்

பொன் ஆபரணங்கள் சேரும் பொன்னான வாரம். மனக்குழப்பம் விலகி நிம்மதி ஏற்படுவதோடு, பதவி உயர்வால் உத்தியோகத்தில் இடமாற்றமும் உண்டாகும். வீடு/மனை வாங்க சிறந்த தருணம். சத்ரு தொல்லைகள் விலகும். வாகனங்களில் செல்கையில் கவனம் தேவை. வாக்கு வாதத்தில் ஈடுபடுவதைத் தவிர்த்தால் நீண்ட நாள் வழக்கு முடிவுக்கு வரும்.

## கடகம்

தொட்டது துலங்கும் மங்களகரமான வாரம். மனநிம்மதியும், வீடு/மனை வாங்கும் தைரியமும் கிட்டும். கௌரவ பதவி தேடி வரும். ஜாமீன் போடுவதை தவிர்த்தல் நலம்.

## சிம்மம்

பணவரவு அதிகரித்து லட்சுமி கை பொங்கும் வாரம். சத்ரு தொல்லைக விலகி பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். குழந்தைகள் வேலையில் பொருட்டு இடம் மாறிப் போவார்கள் நண்பர்கள் விலகிப் போவார்கள். எனினும் கடன் பிரச்னை முற்று பெறும்.

## கன்னி

புதிய தொழில் தொடங்க, பொருத்தமான வாரம். குடும்பத்தோடு புண்ணியத்தலம் சென்று வருவீர்கள். நினைத்தது நடக்கும். வீடு மாற்றமும் உத்தியோகத்தில் உயர்வும் இருக்கும். திடீர் நஷ்டம் வந்து சேர்ந்தாலும், கூடவே தீர்வும் வரும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை.

## துலாம்

பூமி மூலம் ஆதாயம் கிட்டும் பொலிவான வாரம். புதிய சொத்து சேருவதால்

மனமகிழ்ச்சி பொங்கும். கவலைப்படா தீங்க. உடல் ஆரோக்கியம் பாதித்தாலும் சத்ரு தொல்லைகள் இருக்காது. பண வரவுக்குக் குறைவிருக்காது. வெளிநாடு செல்லும் யோகம் கிட்டுவதால், விலகி நின்ற நண்பர்கள்/உறவினர்கள் ஒன்று சேருவார்கள்.

## விருச்சிகம்

கூட்டாளிகளால் நல்லது நடக்கும்



# நடக்கும்!

## 14.08.2010 வரை

வாரம். கல்வியில் முன்னேற்றம் இருக்கும். புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கினாலும், பண விஷயங்களில் நிதானம் தேவை. உத்தியோகத்தில் கவனம் தேவை. குழந்தைகளால் மன மகிழ்ச்சி கிட்டும். புதிய தொழில் முயற்சி பலனளிக்கும். வழக்குகள் வெற்றி அளிக்கும். புதிய வீட்டுக்குக் குடியேறுவீர்கள்.

## தனுசு

குடும்ப வாழ்வில் பிரச்னை அனைத்தும் தீரும் வாரம். உடல் ஆரோக்கியத்திலும் பண வரவிலும் முன்னேற்றம் இருக்கும். குலதெய்வ வழிபாடு குறைகளைப் போக்கும். கட்டடங்களில் முதலீடு செய்பவர்கள் நிதானத்தோடு செயல்படவும்.

## மகரம்

மாணவர்களுக்கு மகிழ்ச்சியான வாரம். பூர்விகச் சொத்துகளில் இருந்து வந்த வில்லங்கம் தீரும். கடவுளின் கருணையால் நிலம்/வீடு வாங்கும் யோகம் கிட்டும். வியாபாரத்தில் லாபம் அபரிமிதமாக இருக்கும். வழக்கில் வெற்றியும் கிடைக்கும். நண்பர்களின் உதவியால் ஆபத்து நீங்கும்.

**தஞ்சை பரத்வாஜ்**

## கும்பம்

கடன் தொல்லை நீங்கும் கனிவான வாரம். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. சுபகாரியப் பேச்சு வார்த்தை பலனளிக்கும். கல்வியிலும் உத்தியோகத்திலும் கவனம் தேவை. சறுக்கல்கள் வந்தாலும் குலதெய்வ வழிபாட்டால் நிவர்த்தியாகும்.

## மீனம்

செலவுகள் கட்டுக்குள் இருக்கும் மகிழ்வான வாரம். வேலைப்பளு அதிகரிக்கும். தொழிலில் உறவினர்களால் தொல்லைகள் உண்டாகும். ஆரோக்கியம் பாதிக்காது. இருப்பினும் உடலில் அசதி ஆக்கிரமிக்கும். பூர்வீகச் சொத்துகள் பிரிவினை ஆகும். குழந்தைகள் கல்வியால் உயரிய பதவியை அடைவார்கள்.

# கண்டறியாதன கண்டேன்



# கடவுளின்

ஆலயங்களின் ஜீவனாக விளங்குவது, மூலஸ்தானம் என்கிற கருவறை! சிறிய கோயில்களாக இருந்தாலும், மிகப் பிரம்மாண்டமான அமைப்புடன் விளங்கினாலும், தேடிச் செல்லும் அனைவரின் பார்வையும் பதிகின்ற இடம் இதுதான்.

மனித மனத்தின் நம்பிக்கைச் செடிக்கு வேரடி நீராக விளங்குவது, இங்கே எழுந்தருளும் மூர்த்திதான். நின்ற கோலம், இருந்த கோலம், அமர்ந்த கோலம், கிடந்த கோலம் என்று இங்கே திருவுருவங்களைத் தரிசிக்கிறோம். அவற்றில் சில, அபூர்வமானவை.

ராமன் என்று சொன்னவுடன், வில்லும் அம்பும் தரித்து சீதையும் இலக்குவனும் அனுமனும் உடன் திகழ, நிற்கும் திருக்கோலம்தான் நினைவுக்கு வரும். ஆனால், கால்களை மடித்து அமர்ந்த கோலத்தில், வலக்கரத்தை தம் நெஞ்சில் பதியச் செய்தபடி, இடக்கரத்தை மடியில் ஊன்றிய நிலையில் காட்சிதரும் ராமனை, திருவண்ணாமலை செல்லும் வழியிலுள்ள நெடுங்குன்றம் என்னும் நெடுங் குணத்தில் தரிசிக்கலாம். இடப் பக்கம், அமர்ந்த கோலத்தில் சீதையும், வலப்பக்கம் கரங்களைக் குவித்தபடி சற்றே வணங்கிய நிலையில் நிற்கும் இலக்குவனையும் தரிசிக்கலாம். ஆச்சர்யம் என்னவென்றால், ராமனிடம் வில் இல்லை; இலக்குவன் வில்லோடு நிற்கிறான். அடுத்து, அனுமன் தரையில் அமர்ந்து ஓலைச்சுவடியை வாசித்துக் கொண்டிருக்கிறான்.

இதில் ஆச்சர்யப்பட என்ன இருக்கிறது? ராமன் மகுடம் அணிந்திருக்கிறான்; சீதை மகுடம் அணிந்திருக்கிறாள். தவிர, ராமன் அமர்ந்திருக்கும் ஆசனத்தில், சிம்மத்தின் வடிவம் தென்படுகிறது.

மன்னன் தன்னுடைய இடத்தில்தான் ஆயுதங்களைத் துறந்திருப்பான். காரணம் காவலுக்கு பலர் இருப்பார்கள். ஆக, மகுடம் தரித்த ராஜாராமன் இப்படி அமர்ந்த காரணம் என்ன? இதற்கான பதில், அத்யாத்ம ராமாயணத்தில் இருக்கிறது.

'ராமனே பரம்பொருள்' என்று சொல்லும் 'ஸ்ரீராம ஹ்ருதய'த்தை, ஸ்ரீ அனுமனுக்கு ராமனின் சொல்படி

உபதேசம் செய்கிறாள் சீதாப்பிராட்டி. அதை, உடனிருந்த இலக்குவனும் கேட்கிறான்.

'அந்தத் தத்துவத்தால் அறியப்படும் பரம்பொருள் நானே' என்பது போல, ராமனின் வலக்கரம் அவன் நெஞ்சை நோக்கியிருக்கிறது. இது, வால்மீகியோ, கம்பனோ காட்டாத காட்சி. இதே போன்ற கோலத்தை, படவேட்டிலும் காணலாம். அங்கே, யோக ராமர் கோயில் என்று சொல்வார்கள்.

**ச**யனக் கோலத்தில், பல்வேறு தலங்களில் கோயில் கொண்டிருக்கிறார் ஸ்ரீமகாவிஷ்ணு. அவற்றில் குடந்தை சாரங்கபாணி விசேஷமானவர். இவரைப் பற்றித்தான், 'ஆரா அமுதே' என்று நம்மாழ்வார் பாடினார். இந்தப் பதிகத்தைக் கேட்டுத்தான், நாதமுனிகள் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தைத் தேடிக் கிளம்பினார்; மீண்டும் கிடைக்கப் பெற்றார்.

இந்தப் பெருமாளைத் தரிசிக்க வந்த திருமழிசையாழ்வார் ஒரு கேள்வி கேட்டார்:

*நடந்த கால்கள் நொந்தவோ? நடுங்க*
*ஞால மேனமாய்*
*இடந்தமெய் குலுங்கவோ?*
*இலங்குமால் வரைச்சுரம்*
*கடந்தகால் பரந்தகாவி ரிக்கரைக்*
*குடந்தையுள்*
*கிடந்தவா றெழுந்திருந்து பேசு வாழி*
*கேசனே.*

'சீதாப் பிராட்டியைத் தேடியலைந்து நடந்ததால் கால்கள் நொந்து போயிற்றா? உலகம் நடுங்க வராஹவதாரம் எடுத்த களைப்பா? ஏன் இப்படிப் படுத்திருக்கிறாய்? எழுந்து பேசு' என்கிறார் ஆழ்வார். பகவானும் பதில் சொல்லியிருப்பான். நமக்குத் தெரியாது போனாலும், எழுந்திருக்க முற்படுகிற மாதிரியான சயனக் கோலம். இதை உத்தான சயனம் என்பார்கள்.

# உபகரணங்கள்



ஹேம ரிஷியின் புதல்வியாக வளர்ந்து வந்த திருமகளை மணக்க வைகுண்டத்திலிருந்து தேரில் வந்தானாம் பகவான். அதனால், யானைகள் இழுத்துச் செல்லும் தேர் வடிவில் அமைந்துள்ளது மூலஸ்தானம்.

திருமால் மட்டும் தான் சயனக் கோலம் கொண்டிருக்கிறாரா என்றால், இல்லை; சுருட்டைப் பள்ளியில் சிவபிரானும் சயனக் கோலம்தான். பொள்ளாச்சி அருகிலுள்ள ஆனைமலையில் மாசாணியம்மனும் சயனக்கோலம் தான். இவர்கள் மட்டுமல்ல; நாக்பூரில் இருந்து

சிந்த்வாடா செல்லும் வழியில், ஜன்ச வாலி என்னுமிடத்தில் அனுமனுக்கும் சயனக் கோலம். இவரைப் பார்த்தால், 'சஞ்சீவி மலை தூக்கி வந்த களைப்பா? யுத்தம் செய்த களைப்பா?' என்று நமக்குக் கேட்கத் தோன்றுகிறது.

**ஆ**ஞ்சநேயருக்குரிய தனிச்சிறப்பு என்று சொன்னால், மற்ற எல்லா மூர்த்திகளையும் விட அவர் கொண்டிருக்கும் பிரம்மாண்டமான திருவுருவங்கள்தான். நாமக்கல்லும், சுசீந்திரமும் மூலஸ்தானம் இல்லாவிட்டாலும், அனுமனின் பேருருக் கொண்டவை. ஆனால், சென்னை நங்கநல்லூரில் முப்பத்திரண்டு அடி விஸ்வரூபத் திருமேனி வியப்பூட்டுவது. சோளிங்கபுரத்தின் யோக ஆஞ்சநேயர் சங்கு சக்கரம் ஏந்திய அபூர்வர்.

அபூர்வம் என்னும்போது, திருவாரூரின் கமலாம்பிகையைச் சொல்ல வேண்டும்.

'அவர் தியாகராஜா' என்றால் 'நான் ராணி' என்பது போலக் காட்சி தரும் கமலாம்பிகையின் பேரழகு சொல்லி மாளாது. சந்திர கலை தரித்த சிரம்; இடது கால்மீது வலதுகாலைப் போட்ட அமர்ந்த திருக்கோலம்; உயர்த்திய வலது கரத்தில் மலர்; புன்னகை நெளியும் இதழ்கள்.... இப்படி பார்க்கத் தெவிட்டாத பரவச அனுபவம்.

பொதுவாக, அம்பிகையின் வடிவங்கள் எல்லாவற்றிலும் அங்குசம், பாசம் ஆகிய இரண்டு ஆயுதங்களாவது இருக்கும். காளி, மஹிஷாசுரமர்த்தினி போன்றவர்கள் கூடுதலான ஆயுதங்களுடன் காட்சி தருவர். ஆனால், எந்த ஆயுதமும் இல்லாமல் காட்சி தருபவள் கமலாம்பிகை. இவளைப் போலவேதான் கூடலின் மகாராணியான 'சொக்கி'யும்!

இந்த வரிசையில், கிராமங்களில் வழிபடப்படும் எல்லை தெய்வமான காத்தாயி




அம்மனையும் சொல்லலாம். காத்யாயன முனிவரின் மகளாக வளர்ந்ததால், அம்பிகை கொண்ட பெயரான 'காத்யாயினி' என்பதன் எளிய வடிவம்தான், 'காத்தாயி' என்பார் காஞ்சி மகாபெரியவர்.

தஞ்சாவூரிலிருந்து திருவாரூர் செல்லும் வழியில் உள்ள கோவிலூருக்கு அருகே இருக்கும் 'நெல்லித்தோப்பு' என்னுமிடத்

தில் இந்த அம்பிகையை தரிசிக்கலாம். தன் மடியில் குழந்தையை அமர்த்தி அணைத்த படி, இடக்கரம் அபயமாகவும், வலக்கரத்தில் மலரும் தாங்கி அமர்ந்த திருக்கோலம். சுதை வடிவம்தான் என்றாலும், சொக்க வைக்கும் அழகு! இரண்டே கரங்களுடன் காட்சி தரும் இந்த அம்பிகையும், ஆயுதமேதும் தரிக்கவில்லை என்பதுதான் வியப்பு.

திருவிண்ணகர் என்னும் உப்பிலியப்பன் கோயிலில், 'மாம் ஏகம் சரணம் வ்ரஜ' என்கிற பகவத் கீதையின் வாக்கியம் பகவானின் திருக்கரங்களில் ஒளிர்வதைக் காணலாம். இது மட்டுமல்ல; மனைவியான பூமிப் பிராட்டியுடனும், அவளை வளர்த்த மார்க்கண்டேய முனிவருடனும் மூலஸ்தானத்தில் தரிசனம் அருள்கிறான் பகவான்.

'தன் மகள் கஷ்டப்படக் கூடாது; கண் கலங்கக் கூடாது' என்பதைவிட ஒரு தகப்பனின் எதிர்பார்ப்பு வேறென்ன இருந்துவிட முடியும்? அப்படி மகளைக் கண்கலங்காமல் கவனித்துக் கொள்ளும் ஒரு மாப்பிள்ளை அமைந்துவிட்டதால், மனங்குளிர்ந்து வணங்குகிறார் மார்க்கண்டேயர். 'வணங்கத்தக்க மாப்பிள்ளையாயிரு' என்று விண்ணை கரப்பன் உபதேசிப்பதாகவே தோன்றுகிறது.



இப்படிப் பலப்பல மூர்த்திகளைக் கருவறையில் தரிசிக்கிறோம். இறைவனின் பரம்பொருள் தன்மையை 'காலமும் கணக்கும் நீத்த காரணன்' என்பான் கவிச் சக்கரவர்த்தி கம்பன். காலமும் இடமும் கடந்தது கடவுள் தத்துவம். இடம் என்பதை வெளி என்றும் பொருள் கொள்ளலாம்.

Time and space factor என்று அறிவியலில் சொல்வார்கள். கடவுளின் உபகரணங்களாகத் திகழ்பவை இவை தான்.

அந்தப் பரம்பொருளே வெவ்வேறு வடிவங்களாக வெளிப்படுகிறது என்கின்றன தத்துவங்கள். அதை, 'ஏகம் சத்' என்கிறது வேதம். நம் காலத்தவனான மகாகவி பாரதியும் அதையே சொல்வான்:

'ஒன்றுளது பிரம்மம்;
அதன் பேர் உண்மை!'

அட! எல்லாக் காலத்துக்கும், எல்லா நாட்டுக்கும் பொருத்தமான உண்மை!

**காலமும் இடமும் கடந்தது கடவுள் தத்துவம். கடவுளின் உபகரணங்களாகத் திகழ்பவை இவைதான்.**

**(அடுத்த வாரம் நிவேதனம்)**



'பொல்லாதவனி'ல் வடசென்னையைக் கதையின் களமாக காட்டிய வெற்றிமாறன், தற்போது இயக்கும் 'ஆடுகள'த்திற்கு மதுரை களத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். தற்போதைய கோடம்பாக்கத்தின் மதுரை செண்டிமெண்டிற்கு வெற்றிமாறனும் அகப்பட்டுக் கொண்டாரா என்ற கேள்வியோட இயக்குநரைச் சந்தித்தோம்.

"'ஆடுகளம்' இரண்டு தலைமுறை மனிதர்களைப் பற்றிய படம். இரண்டு தலைமுறையினர்க்கு இடையேயுள்ள இணக்கம், பிணக்கு பற்றிய இந்தக் கதைக்கு மதுரை பின்னணியாக இருந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. படத்தில் மதுரையே ஒரு கேரக்டர்தான். முக்கிய கேரக்டர்கள் தவிர, கிட்டத்தட்ட நாற்பத்தைந்து கேரக்டர்கள் மதுரை மண்

# நடிகர்கள்

ணின் மக்களே நடித்திருக்கிறார்கள். இந்த நாற்பத்தைந்து பேரும் சென்னைக்கு வந்து டப்பிங் பேசுவது சிரமமான காரியம் என்பதால் மதுரையில் வைத்தே டப்பிங் பேச வைத்தோம். கிட்டத்தட்ட ஒன்றரை ஆண்டுகள் மதுரையின் திருப்பரங்குன்றம், ரயில்வே காலனி பகுதிகளில் பெரும்பான்மை

யான படப்பிடிப்பு நடந்தது. இந்த ஒன்றரை ஆண்டு காலத்தில் மதுரை மக்களின் வெளிப்படை யான பேச்சும், அன்பும் சென் னையில் வளர்ந்த என்னை மிகவும் ஈர்த்து விட்டது. படப் பிடிப்பு நடந்த காலகட்டத்தில் மதுரையிலேயே ஆடுகளத்திற் கான ஆபீஸ் அமைத்தோம். 'மாடர்ன் தியேட்டர்ஸ்' காலகட்டத்திற்குப் பிறகு சென்னையைத் தாண்டி இரண்டாம் நிலை நகரங்களில் சினிமாவிற்காக அலுவலகம் அமைத்தது எங்கள் டீம்தான்."


* ஜெயபாலன்

**ஆடுகளத்தின் ஆட்டநாயகன்?**

"தனுஷ் முக்கிய கேரக்டரில் வருகிறார். படப்பிடிப்புக்கு வரும் ஒவ்வொரு நாளும் புதுப்புது விஷயங்களைக் கற்றுக் கொள் கிறார். இந்தப் படத்தின் வசனகர்த்தா அசோசியேட் டைரக்டர் விக்ரம் சுகுமாரன். இவரும் மதுரைக்காரர்தான். தனுஷிற்கு மதுரைத் தமிழ் புதிது என்பதால், சில சம யங்களில் விக்ரம் சுகுமாரனிடம் உச்சரிக்கச் சொல்லிக் கற்றுக் கொள்கிறார். சின்ன விஷயங்களையும் நேர்த்தியாகச் செய்ய வேண்டும் என்ற முயற்சிதான் தனுஷின் இத்தனை பெரிய வெற்றிக்குக் காரணம்."

**ஆட்ட நாயகி?**

"ஹீரோயின் தாபசி டெல்லியைச் சேர்ந்த மாடல். நான் முதலில் ஃபோட் டோவில் பார்த்தபோது செலக்ட் செய்ய வில்லை. ஆனால் நேரில் பார்த்தபோது படத்தில் ஆங்கிலோ-இந்தியன் கேர்ளாக நடிப்பதற்கு கரெக்டாக இருப்பார் என்று தோன்றி செலக்ட் செய்தேன். கேரக்டரை உணர்ந்து சரியா வெளிப்படுத்தி யிருக்கு பொண்ணு. தமிழ் சி னிமாவில் ஒரு ரவுண்டு வர ஸ்கோப் இருக்கு."

**ஈழ கவிஞர் வ.ஐ.ச. ஜெய பாலனை இயக்கிய அனுபவம்...?**

"பொதுவாக நடிகர்கள் ஷூட்டிங் ஸ்பாட்டில் கேள்வி கேட்பவர்களாக இருக்கக்கூடாது. டைரக் டர் சொல்வதை அப்படியே கேட்டு நடிப் பவர்களாக இருக்க வேண்டும். ஆனால், ஜெயபாலன் கேள்வி கேட்கக்கூடிய சூழ லில் இருந்து வந்ததால் ஷூட்டிங்கில் ஏன்? எதற்கு என்று கேள்வி கேட்டுக் கொண்டேயிருந்தார். கேரக்டரை உள் வாங்கிச் சரியான நடிப்பை வெளிப் படுத்தவும் சிரமப் பட்டார். அதன் பிறகு நடிப்பு தொடர்பா



# கேள்வி கேட்கக்கூடாது!

ன புத்தகங்களை ஜெயபாலனைப் படிக் கச் சொன்னோம். நடிப்பதற்கு தனியான பயிற்சியும் அளித்தோம். அதன் பிறகு இரண்டாவது ஷெட்யூல் படப்பிடிப் பின் போது சரியான நடிப்பை வெளிப் படுத்தினார்.

'பொல்லாதவனி'ல் எங்கள் கூட்டணிக் குக் கிடைத்த வெற்றி ஆடுகளத்திலும் தொடரும் என்ற நம்பிக்கை இருக்கிறது."

**- ராகவ்குமார்**

# எனக்கு எது

## பளிச் பரிகாரம்

**மகம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் ஆடம்பரப் பிரியர்களாவும், சுயநலவாதிகளாவும் இருப்பார்களாமே?**

ம.தினேஷ் (சென்னை)

**மகாத்மா காந்திக்கு மகம்.**



**ராஜேஸ்வரி, ஈரோடு.**

***தேய்பிறையில் வரும் முகூர்த்த நாட்களில் திருமணம் போன்ற சுப விசேஷங்களை நடத்தலாமா?***

நடத்தலாம். ரிஷபம், சிம்மம், தனுசு, கும்பம் ஆகிய நான்கு ராசிக்காரர்களுக்கும் வளர்பிறையை விட தேய்பிறைக் காலங்களில்தான் அதிக நன்மை நடக்கும்.

**வேதவல்லி, சென்னை-5.**

***குலதெய்வ வழிபாடு மிகவும் அவசியம் என்று கூறுகின்றனர். எங்களுக்கு குலதெய்வம் எது என்றே தெரியவில்லை. என்ன செய்வது?***

வாழ்க்கையில் நல்ல வளர்ச்சி ஏற்பட குலதெய்வ வழிபாடு மிக மிக அவசியம். தங்களின் குலதெய்வம் எது என்று தெரியாதவர்கள் சைவர்களாக இருந்தால் சிதம்பரம் நடராஜப் பெருமாளை வழிபடுங்கள். வைணவர்களாக இருந்தால் ஸ்ரீரங்கம் ரங்கநாதப் பெருமாளை வழிபடுங்கள். குலதெய்வம் ஏதேனும் அம்மனாக இருந்தால் காஞ்சிபுரம் காமாட்சி அம்மனை வழிபட வேண்டும். வருடத்திற்கு ஒருமுறை இந்த மூன்று தலங்களுக்கும் சென்று வழிபடுவது மிகவும் நல்லது.



**மோகன்ராஜ், விழுப்புரம்.**

***எனக்கும், எனது 3 வயது மகனுக்கும் மகம் நட்சத்திரம். இது ஒரு தோஷமா? நாங்கள் ஒரே வீட்டில் வசிக்கலாமா? இதனால் குடும்பத்தில் ஏதாவது கெடுதல் நடக்குமா?***

ஜாதகரீதியாகவும் உங்கள் மகன் உங்களைப் போலவே இருப்பதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. ஒரே நட்சத்திரத்தில் மகனும் இருப்பது தோஷமல்ல. அதுதான் கடவுளின் படைப்பில் உள்ள விந்தை. எனக்குத் தெரிந்த ஒரு குடும்பத்தில் எட்டு பேர் உள்ளனர். அவர்களில் ஆறு பேர் பூராடம் நட்சத்திரம். அனைவரும் ஒன்றாகத்தான் வசிக்கின்றனர். நன்றாகவும் உள்ளனர். பெரும்பாலான குடும்பங்களில் தாய் தந்தையின் நட்சத்திரங்களில் குழந்தை பிறக்கும். இது இயற்கை. இதில் கவலைப்படுவதற்கோ பயப்படுவதற்கோ ஒன்றுமில்லை. மகிழ்ச்சியாக சேர்ந்து வாழுங்கள். குழந்தையும், தாயும் பிரிக்கப்பட வேண்டாம். அது பாவம்.

**ராஜேஷ், மதுரை.**

***2012-ல் உலகம் அழிந்து விடும் என்று மேலைநாட்டு ஜோதிடர்கள் சொல்லுகின்றனர். அது உண்மையா?***

கலியுகம் தொடங்கி 5111 ஆண்டுகள் மட்டுமே ஆகின்றது. இன்னும் பல்லா

**ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்**

# தலைதெய்வம்?

யிரம் ஆண்டுகளுக்கு இந்த யுகம் நீடிக்கும். கலியுகத்தின் நிறைவில் பெருமாள் கல்கி அவதாரம் எடுக்க இருக்கிறார். திருமங்கை ஆழ்வாருக்கு மாமல்லபுரத்தில் கல்கி அவதாரக் காட்சியைப் பெருமாள் காட்டியுள்ளார். 'கடல்மல்லை தலசனயத்துட் கற்கியை கண்டேனே' என்பது திருமங்கை ஆழ்வார் வாக்கு. ஆகவே, பெருமாளை நம்புகின்ற யாரும் மேலைநாட்டுக்காரர்களின் இந்தப் புரளியை நம்ப மாட்டார்கள். அதை நம்பி நீங்க எக்கச்சக்கமா கடன் கிடன் வாங்கிடப் போறீங்க. மாட்டிப்பீங்க.



**இலஞ்செழியன்,**
**வேளச்சேரி.**

***பரிகாரம் செய்வதற்காக ஒரு கோயிலுக்குச் சென்று சாமி தரிசனம் செய்துவிட்டு அப்படியே மற்றொரு கோயிலுக்குச் செல்வது தவறா? வீட்டிற்குத் திரும்பி வந்து விட்டு மறுபடியும் கிளம்பி அடுத்த கோயிலுக்குப் போக வேண்டும் என்கின்றனர் சிலர். இதுபற்றி தங்கள் கருத்து என்ன?***

தொடர்ச்சியாக பல தலங்களுக்குச் சென்று வழிபாடு செய்வதை க்ஷேத்திராடனம் என்பார்கள். ஒரு கோயிலுக்குச் சென்று சாமி தரிசனம் செய்துவிட்டு மற்ற கோயில்களுக்கும் போகலாம். உதாரணமாக, சென்னையில் உள்ளவர்கள் கும்பகோணம் சென்றால் 25 கோயில்களையாவது தரிசனம் செய்துவிட்டுத்தான் வருவார்கள். வடநாட்டு யாத்திரை செல்பவர்கள் அலகாபாத், காசி, கயா, பத்ரிநாத், ஹரித்துவார், ரிஷிகேஷ் போன்ற பல தலங்களுக்குச் சென்றுவிட்டு வருவதுதானே வழக்கம். ஒரு கோயிலுக்குச் சென்று விட்டு மற்றொரு கோயிலுக்குச் செல்லக் கூடாது என்பது அறியாமையின் உச்சகட்டம். தொடர்ச்சியாக பல தலங்களுக்குச் சென்றால் எந்தச் சாமியும் கோபித்துக் கொள்ளாது. ●

**உங்கள் கேள்விகளை ஜாதகக்குறிப்போடு 'பளிச் பரிகாரம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க...**
**kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.**




"கல்யாணம் ஆன புதுசு. என் கணவர் ஸ்ரீதர் புதுசா ஒரு சைக்கிளை வாங்கிட்டு வந்து வாசல்ல நிப்பாட்டினார். இப்படி ஒரு டூ வீலர் வாங்கப் போறேன்னு என்கிட்டே கூட சொல்லலை. வெள்ளைப் பறவை ஒண்ணு வாசல்ல வந்து நிக்குற மாதிரி இருந்துச்சு. பள்ளி நாட்களிலேர்ந்து சைக்கிள்னா எனக்கு ரொம்பப் பிடிக்கும். இது வேற... வித்தியாசமான டூவீலரா, அட ஆமாங்க... சைக்கிள பார்த்ததுமே என் மனசுல பச்சக்னு ஒட்டிகிச்சு. அந்த சைக்கிளோட பேரு (Hero Octane) ஹீரோ ஆக்டேன். அலுமினியம் அலாய் மெட்டீரியல்ல உருவானது. பார்க்க ரொம்ப ஸ்டைலிஷ் லுக் ஆக இருந்துச்சு. கியர் சிஸ்டம் கொண்டது. அதுவும் (3x7) 21 கியர் கொண்டது. உயரமான மேடு, தாழ்வான பள்ளம் எதுவா இருந்தாலும் சுலபமான சவாரி, சுகமான சவாரி. டூ வீலர்களில் பொருத்தப்பட்டிருக்கும் டிஸ்க் பிரேக், இதுல இருக்கு. இந்தச் சைக்கிள் விலை பத்தாயிரம் ரூபாய். சுற்றுச் சூழல் பாதுகாப்புக்கு உத்தரவாதமான இந்த ஹீரோவை என் தோழியாக்கிக்கிட்டேன்!"

- குணசெல்வி ஸ்ரீதர், ஸ்ரீரங்கம்



எனது மகன் 1999ம் ஆண்டு எனக்கு 'கைனடிக் ஹோண்டா' வாங்கிக் கொடுத்தான். அலுவலகம் சென்று வர மிகவும் உதவியாக இருந்தது. என்னுடன் அலுவலகம் வரும் சில சக ஊழியர்கள் 'இது லேடீஸ் வண்டிப்பா'ன்னு நக்கலடித்ததும் உண்டு.

சின்மயா நகரில் ஒரு சின்ன விபத்து. தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போனது. பெரிய கியர் வண்டியா இருந்தா விபத்து பெரிசா இருக்குமோ என்னவோ... எனது மகன் ஊரிலிருந்து வந்து வேறு வண்டி வாங்கி தரவா என்றதற்கு மறுத்து. இதுவே சிறந்த நண்பன் என்று சொன்னேன்!

- என்.பாலசுப்பிரமணியன், சென்னை - 40



# கூழானாலும் கும்பிட்டுக் குடி!

ஆடி மாதம் ஞாயிற்றுக் கிழமைகளில் அம்மன் கோயில்களில் கூட்டம் அலை மோதும். அன்று, போனஸாக நடக்கும் ஒரு நிகழ்ச்சி 'கூழ் ஊற்றுதல்'. ஏதாவது பிரார்த்தனை செய்து கொண்டு அது நிறைவேறினால் கூழ் ஊற்றி நிறைவேற்றுவார்கள். அம்மனுக்குக் கூழைப் படைத்து விட்டு, கோயிலுக்கு வரும் பக்தர்கள் மற்றும் அவர்கள் வசிக்கும் தெருக்களில் விநியோகிப்பார்கள். பிரார்த்தனை ஏதும் இல்லாமலேயே வருடத்திற்கொரு முறை 'கூழ் ஊற்றும்' குடும்பங்களும் உண்டு. ''முன்பெல்லாம் கோயில் வாசலில் கொடுக்கும் போது ஆர்வத்துடன் வந்து வாங்கிக் குடிப்பார்கள். இப்போது வெட்கப்பட்டு விலகி ஓடுகிறார்கள். எனவே, அம்மனுக்குக் கூழ் படைப்பவர்கள் பாத்திரங்களில் போட்டு பல வீடுகளுக்கு அனுப்பி விடுகிறார்கள்'' என்கிறார் பூசாரி சந்திரன். போகட்டும்... கூழ் செய்வது எப்படி?



ஞாயிற்றுக்கிழமை பகலில் கூழ் ஊற்ற வேண்டுமானால் சனியன்று காலையில் வேலையைத் துவக்கி விட வேண்டும். தேவைக்கேற்றபடி கேழ்வரகு வாங்கி அரைத்து தண்ணீர் ஊற்றி மாவாக்கி தோசை மாவைக் கரைப்பது போல் கரைத்து குறைந்தது பத்து மணி நேரமாவது புளிக்க வைக்க வேண்டும். மாவு பொங்கிவரும். பிறகு, தனியாக தேவைக்கேற்றபடி பச்சரிசி அல்லது புழுங்கலரிசி நொய்யை ஒன்றுக்கு மூன்று பங்கு தண்ணீர் விட்டுக் குழைய வேகவைக்க வேண்டும். பின்னர் கேழ்வரகு மாவை வெந்து போன நொய்யோடு கலந்து மிதமான உஷ்ணத்தில் இடைவிடாமல் கிளறிக் கொண்டே இருக்க வேண்டும். அந்தக் கலவை கூழ் பதத்துக்கு வந்துவிடும். அதை அப்படியே மூடி வைத்து விட வேண்டும். சனி இரவுக்குள் இதை முடிக்க வேண்டும். ஞாயிறு காலை கூழ் விநியோகத்திற்குச் சிறிது நேரத்திற்கு முன் உப்பு, தயிர், சின்ன வெங்காயம், பச்சை மிளகாய் (அரைத்தது), கறிவேப்பிலை ஆகியவற்றைப் போட்டுக் கிளறினால் சூப்பரான கூழ் தயார். இரண்டு கிளாஸ் உள்ளே இறக்கினால் வயிறு திம்மென்று ஆகித் தூக்கம் கண்களைச் சொக்கும்.

அது சரி? கூழுக்குத் தொட்டுக் கொள்ள? அசைவப் பிரியர்களுக்கு மொச்சைக் கொட்டை, கத்தரிக்காய் கருவாடு கலந்த குழம்பு. மற்றவர்களுக்கு முருங்கைக் கீரை பொரியல்! ஓவ்...வ் (ஏப்பம் ஸார்!)

- ஸ்ரீநி



# வீழ்ந்திடுமா விசைத்தறி?

"**நா**ன்கு மாதங்களுக்கு முன்பு நூல் ஒரு 'பேல்' ரூபாய் பதினான்காயிரம்; தற்போது பத்தொன்பதாயிரம். மின்தடையால் ஒரு நாளைக்கு விசைத்தறியை இயக்க டீசலுக்கு மட்டும் ரூபாய் 200 ஆகிறது. கடுமையான விலைவாசி உயர்வால் விசைத்தறி நெசவாளர்களுக்கு ஒரு சேலைக்கு ரூபாய் இரண்டு கூலி உயர்த்தியுள்ளோம். ஆனால் எங்களால் சேலைகளின் விற்பனை விலையைக் கூட்ட முடியவில்லை. இத்தனைக்கும் ஒரு சேலையின் அடக்க விலை ரூபாய் 15 வரை கூடியுள்ளது. இதே நிலை நீடித்தால் தொழிலை நிறுத்த வேண்டியதுதான்" என்கிறார் அருப்புகோட்டை விசைத்தறி உற்பத்தியாளர் பழனி குருசாமி. விசைத்தறியில் இவருக்கு இருபது வருட அனுபவம்.

விசைத்தறித் தொழிலில் 3.2 லட்சம் தறிகளும் 142 கூட்டுறவு சங்கங்களும் இருப்பதாக அரசின் புள்ளிவிவரம் சொல்கிறது.கைத்தறியைப் போலவே எல்லாப் பிரச்னைகளும் விசைத்தறிக்கும் உண்டு. 1980களில் கிட்டதட்ட ஒரு புரட்சியைப் போல எழுந்தது விசைத்தறி. தமிழகத்தின் விருதுநகர் மாவட்டத்தில் துவங்கி பல




குறைந்த காலத்தில் மிக அதிக உற்பத்தி தான். இங்கு மட்டும் ஒரு நாளின் உற்பத்தி 25,000 சேலைகள். பெரும்பாலான குடும்பங்களில் குடும்பத்தினரே வேலை செய்கின்றனர். காரணம், தொழிலாளர் தட்டுப்பாடு தான். இவர்களுடைய பிரச்னை ராக்கெட் வேகத்தில் ஏறும் நூல் விலைதான். தவிரவும் மற்றொரு பிரச்னை, டிஸைன்கள்.

''எங்களுக்கு ஈரோடு, குமாரபாளையம் போன்ற இடங்களில் இருந்துதான் டிஸைன்கள் வருகின்றன. அதை கற்று நெய்ய ஆரம்பிப்பதற்குள் டிஸைன் பழையதாகிவிடுகிறது. மேலும் அவ்வளவு தூரம் சென்று டிஸைன்களைக் கற்று வர முடியாது'' என்கிறார் சண்முக வடிவு.

திருப்பூர், அவிநாசி, பல்லடம், அன்னூர், சோமனூர், ஈரோடு, பவானி, பள்ளிப்பாளையம், திருச்செங்கோடு, சென்னிமலை, கரூர், குமாரபாளையம் போன்ற பகுதிகளிலும் விசைத்தறிகள்தான் அதிகம். இன்றைய திருப்பூரின் வளர்ச்சிக்கு இவர்களின் பங்களிப்பு அதிகம். சிறிய வீட்டுத் தறிகளிலிருந்து வெளிநாட்டு மிஷின்களுடன் கார்ப்ரேட் ரேஞ்சுக்கு இயங்கும் சிறு நிறுவனங்கள் வரை சுமார் 20,000 விசைத்தறிகள் இயங்குகின்றன.

தென்மாவட்டங்களில் வங்கிகள் தந்த கடன் உதவியால் பல ஆயிரக்கணக்கில் விசைத்தறிகள் வளர்ந்தன. ஒரு நெசவாளியின் வீட்டில் இரண்டிலிருந்து மூன்று தறிகள் கூட ஓட ஆரம்பித்தன.

விருதுநகர் மாவட்டத்தில் அருப்புக்கோட்டை, சத்திரப்பட்டி, தளவாய்புரம், ராஜபாளையம் பகுதிகளில் விசைத்தறி அதிகமாக இருந்தாலும், அருப்புக்கோட்டையில்தான் மிக அதிகம். கைத்தறி நெசவுக்குப் பெயர் பெற்ற அருப்புக் கோட்டையில் 1972 இல் எம்.ஜி.ஆர். முதல்வராக இருந்தபோது நெசவாளர் சங்கங்களைத் துவக்கி வைத்தார். ஆனால் இன்று ஊர் முழுவதும், ஏன் மாவட்டம் முழுவதும் விசைத்தறிதான். மளமளவென்று இந்தத் தொழில் வளர்ந்ததற்கு முக்கிய காரணம்

கட்டுரை : ரமணன்

ஒவ்வொன்றும் சராசரி 50 மீட்டர் துணி தயாரிக்கிறது. இவர்கள் பெரும்பாலும் ஒப்பந்தக் கூலி அடிப்படையில் பெரிய நிறுவனங்களுக்கு வேலை செய்பவர்கள்.



நிறுவனங்கள் தரும் நூலைத் துணியாக்கி கொடுப்பதுதான் இவர்கள் வேலை. தரத்திற் கேற்ப கூலி. வேலை கொடுக்கும் நிறுவனங்கள், அதிகரிக்கும் நூல் விலையையும் குறைவான விற்பனையையும் காரணம் காட்டி இருபது சதவிகித அளவுக்குக் கூலியைக் குறைத்தது மட்டுமில்லாமல் வாரத்துக்கு நான்கு நாட்கள் தான் வேலை என்றாக்கி விட்டார்கள். வங்கி, சொசைட்டி கடன்களைக் கட்ட முடியாமல் ஏற்கெனவே திணறிக்கொண்டிருக்கும் நெசவாளக் குடும்பங்கள், ஏறிவரும் விலைவாசியில் குறைந்த வருமானத்தில் தவிக்கின்றன. நூல்விலை இப்படி ஒரேடியாக ஏற காரணம் என்ன ?

"வாஸ்து மீன் கடத்தின உனக்கு ஆறு மாசம் சிறை தண்டனை!"
"வடக்கு பார்த்த மாதிரி இருக்கற செல்ல போட சொல்லுங்க எசமா?"
- வெ.சீதாராமன்



பருத்தி, பயிரில் பஞ்சாக வெடித்ததில் இருந்து துணியாக மாறுவதற்குள் எடுக்கும் பல அவதாரங்களில் முதல் கட்டம் ஜின்னிங் எனப்படும் தொழில். இங்கே விதைகள், மாசுகள் நீக்கப்பட்டு பஞ்சுப் பொதிகளாக நூல் ஆலைகளுக்கு அனுப்பபடுகின்றன. பிரச்னை இங்குதான் துவங்கிறது. சீஸன் நாட்களைத் தவிர மற்ற நாட்களுக்கு வேலையில்லாததாலும் மிகக் குறைந்த கூலியாலும் ஜின்னிங் பாக்டரி வேலைக்குத் தொழில் தெரிந்தவர்கள் கிடைப்பதில்லை. பாக்டரிகளின் இயந்திரங்கள் வயதானவை. எனவே அதிக மின்சாரச் செலவு வேறு. அதனால் உற்பத்திச் செலவு கூடுகிறது. கடும் மின்வெட்டு ஜெனரேட்ருக்கான டீசலின் விலை உயர்வ



ஏற்றுமதிக்கொள்கை. சர்வதேச அளவில் பஞ்சு உற்பத்தியில் ஏற்பட்ட சரிவினால் சர்வதேச நூல் மார்கெட்டில் தரத்தில் தனியிடம் பெற்றிருக்கும் இந்திய நூல்களுக்கு டிமாண்ட் கூடியது. நூற்பாலைகள் கடனுக்கு விற்றுக் காத்துக் கொண்டிருப்பதைவிட கப்பலில் ஏற்றும் முன்னரே கையில் காசு என்பதால்



* வீழ்ச்சியை நோக்கி...

எல்லாமுமாகச் சேர்ந்து பஞ்சின் விலையை உயர்த்துகின்றன. இடு பொருள் (நூலின்) விலையேற்றம் எல்லா உற்பத்தித் துறையிலும் இருப்பதுதான் என்றாலும் இங்கே மிக அதிகம்.

இந்தத் தொழிலில் வெகு காலம் வரை எல்லாமே கடனில்தான் நடந்து வந்தன. கடனில் நூல் வாங்கி, கடனில் துணி விற்று பணம் வந்தபின் கடனை அடைப்பார்கள் சிறு நெசவாளர்கள். சிறு நிறுவனங்கள் முன்பணம், பின் தேதியிட்ட செக் தருவார்கள். இவர்கள் எல்லோருக்கும் நூல்கள் கடனில் தராளமாகக் கிடைத்துக் கொண்டிருந்தன. திடீரென்று நிலைமை மாறி நூல் விலையை உடனடியாகச் செலுத்தவேண்டும் என்ற நிலை உருவானது. காரணம், அரசின் புதிய ஏற்றுமதி செய்ய வரிசையில் நின்றன. உள்ளூர்க்காரர்களுக்கு... காசு தந்தால் மட்டுமே நூல் என நிலை ஏற்பட்டது. இந்த நிலை, நெசவாளர்கள் திண்டாட்டம் நூற்பாலைகளுக்குக் கொண்டாட்டம் என்று நினைக்கத் தோன்றுகிறதல்லவா? ஆனால் நூற்பாலைகள் சந்திக்கும் பிரச்னைகள் இன்னும் வினோதமானது.

**(அலசுவோம்)**

**தமிழகத்தில் உள்ள சிறந்த பத்து அரசியல் பேச்சாளர்களைப் பட்டியலிட்டால் அதில் ம.தி.மு.க. கொள்கைப் பரப்புச் செயலாளர் நாஞ்சில் சம்பத்துக்கு நிச்சயமாக ஓர் இடம் உண்டு. பல சமயங்களில் வரம்பு மீறி வழக்குகளில் சிக்கிக் கொள்வதும் உண்டு. தினசரி பொதுக் கூட்டங்களில் பேசும் சம்பத், ''எழுதிவைத்துக் கொள்ளுங்கள் கருணாநிதி ஆட்சிக்கு கவுண்ட் டவுன் துவங்கி விட்டது'' என்கிறார்.**

''இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் தினசரி, மக்களைச் சந்தித்துக்கொண்டிருக்கிறேன். அவர்கள் கருணாநிதி ஆட்சியின் மீது கடுங்கோபத்தில் இருக்கிறார்கள் என்பது எனக்குக் கூடும் பெருங்கூட்டத்திலிருந்து புரிந்துகொள்ள முடிகிறது. சமுதாயத்தின் எந்தப் பிரிவினரும் இன்று நிம்மதியாக இல்லை. மின்வெட்டும் விலைவாசி உயர்வும் மக்களை வாட்டி வதைக்கின்றன. சமையல் காஸ் விலை உயர்வு, பள்ளிக் கட்டணம், கல்லூரி கட்டணம் ஏற்றம், பேருந்து கட்டணத்தில் மறைமுக வசூல், நிலவரி, நீர் வரி... என்று கடந்த நான்கு வருடங்களில் 50 முதல் 70 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. மின்வெட்டால் சிறு, குறுந்தொழில்கள் நூறுக்கும் மேற்பட்டவை மூடிக்கிடக்கின்றன. கனிம வளம் சூறையாடப்படுகிறது. கருணாநிதி குடும்பம் ஆக்டோபஸ் போல தமிழகத்தைச் சுற்றி வளைத்து எல்லா தொழில்களையும் ஆக்கிரமித்து வருகிறது. இதைக் கண்டு மக்கள் வெறுப்புற்று இருக்கிறார்கள். சட்டம் ஒழுங்கு சந்திச் சிரிக்கிறது. எந்தப் பிரச்னை எழுப்பினாலும் பிரதமருக்குக் கடிதம் எழுதுவதோடு தம் கடமையை முடித்துக் கொள்கிறார் கருணாநிதி.

தமிழகத்துத் தொழில் வளர்ச்சியை அமெரிக்காவின் வால் ஸ்டிரீட் பத்திரிகை பாராட்டுவதாகப் பெருமைப்படுகிறா கருணாநிதி. ஆனால், சர்வதேச நிதி ஆணையம் சமீபத்தில் இந்தியாவில் தொழில் துவங்கச் சாதகமான சூழல் இருக்கும் நகரங்களைப் பற்றி ஆராய்ந்தது அவர்கள் தேர்ந்தெடுத்த ஐந்து நகரங்களில் தமிழ்நாட்டில் எந்த நகரமும் இல்லை என்பது கருணாநிதிக்குத் தெரியுமா? ஒரு ரூபாய் அரிசியைப் பெரிய சாதனையாகச் சொல்கிறார். ஜெர்மனியைச் சேர்ந்த Fooc First Information Action Network என்ற நிறுவனம் இதைப் பற்றி சர்வே செய்தது. இந்தத் திட்டம் ரேஷன் அரிசி கடத்தலுக்குப் பயன்படுகிறது என்றும், பொது விநியோகத் திட்டம் தடுமாறிப் போயிருக்கிறது என்றும் தமிழகத்தில்

# தி.மு.க.ஆட்சிக்கு

உணவு பாதுகாப்பு இல்லை என்றும் அறிக்கை கொடுத்திருக்கிறது. கருணாநிதி பக்கத்தில் இருக்கும் அதிகாரிகளும் கொள்ளையடிப்பதால் இதையெல்லாம் அவர் பார்வைக்குக் கொண்டுபோக மாட்டார்கள். சந்திரபாபு நாயுடு ஆட்சியைப் புகழாத உலகப் பத்திரிகைகளே கிடையாது. ஆனால், தேர்தலில் தோற்றுப்போனார். அதுபோல தமிழகத்துப் பத்திரிகைகளும் விளம்பர வருமானத்துக்கும், மிரட்டலுக்கும் ஆட்பட்டு துதிபாடிக் கொண்டிருக்கிறார்கள். உண்மை நிலை தேர்தலில் தெரியும். கோடி கோடியாகக் கொட்டிக் கொடுத்தாலும் தி.மு.க. வெற்றியை அறுவடை செய்ய முடியாது.''

ஏற்பட்டுவிடும்.''

**காங்கிரஸைக் கூட்டணியில் ஜெய லலிதா சேர்த்தால் உங்கள் நிலை?**

''கருணாநிதியின் குடும்ப ஆட்சியை விரட்டி அடிக்க அ.இ.அ.தி.மு.க. தலைமையிலான எங்கள் அணி வெற்றிச் சிறகுகளை விரித்துக்கொண்டு தயாராக இருக்கிறது. அ.தி.மு.க.வோடு எங்கள் கூட்டணி வலுவாக இருக்கிறது. எந்த நெருடலும் இல்லை. யாரைக் கூட்டணியில் சேர்க்க வேண்டும் என்பது அ.இ.அ.தி.மு.க. எடுக்க வேண்டிய முடிவு. ஈழப் பிரச்னையில் இனப் படுகொலைக்குக் காரணமான காங்கிரஸையும், அதன் துரோகத்தையும் மறக்க முடியாது; மன்னிக்கவும் முடியாது.''

**ம.தி.மு.க.வுக்குத் தேர்தல் கமிஷன் அங்கீகாரம் ரத்தாகி விட்டதே!**

''ம.தி.மு.க.வை இது போன்று சிறுமைப்படுத்த



# கவுண்ட் டவுன்!

## - நாஞ்சில் சம்பத் பேட்டி

**காங்கிரஸைக் கூட்டணியில் சேர்க்க ஜெயலலிதா முயற்சி செய்கிறாரே?**

''காங்கிரஸ் கட்சி இருக்கும் கூட்டணியே வெற்றிக் கூட்டணி என்று சொல்வது ஒரு வறட்டுக் கற்பனை. கடந்த காலத்தில் 'நீ பாதி; நான் பாதி' என்று இணைந்து தேர்தலைச் சந்தித்த தி.மு.க.வையும் காங்கிரஸையும் எம்.ஜி.ஆர். தோற்கடித்துக் காட்டியிருக்கிறார். தனியாக நின்றும் கேவலப்பட்டுப் போயிருக்கிறது காங்கிரஸ். எனவே, ஓர் உண்மையான நேர்மையான கூட்டணி, மக்கள் ஆதரவுடன் எப்படிப்பட்ட கொடுமையான அதிகார மையத்தையும் அசைத்துப்

வேண்டும் என்ற தீய நோக்கத்தில் செயல்பட்ட தி.மு.க.விடம் எங்கள் மூன்று சட்டமன்ற உறுப்பினர்கள் விலை போய் விட்டார்கள். இதுதவிர தேர்தல் கமிஷனின் கெடுபிடியான சட்டதிட்டங்களின் அடிப்படையில் எங்கள் அங்கீகாரம் ரத்துச் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், அடுத்த ஆறாண்டுகளுக்கு எங்களால் பம்பரச் சின்னத்தைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். வரும் தேர்தலில் தேவைக்கும் அதிகமாக வோட்டு வாங்கி இழந்த அங்கீகாரத்தை மீண்டும் பெறுவோம்.''

**- ப்ரியன்**

'கிளிக் கார்னர்' செய்தி படங்கள் செம ஜாலியாக சுவாரஸ்யப்படுத்தின. கலக்கல்!

**- ஏ.பி.எஸ். ரவீந்திரன், நாகர்கோயில்.**

'தில்லாலங்கடி' படத்தின் விமர்சனத்தைப் படித்தேன். படத்தை ஆஹோ-ஓஹோன்னு புகழாமல், படத்தின் உண்மை நிலை என்ன என்பதை வெட்ட வெளிச்சமாக்கி விட்டீர். தில்லாலங்கடி ஏறி இறங்கும் 'கிக்' என்று கூறிய கல்கியின் தீர்ப்பு மிக சரியானதே! கல்கியின் கெஸ்ஸிங் நோ மிஸ்ஸிங்!

**-கே.அருள்தேவன், வேலூர்-6.**

செல்போன் கோபுரங்களின் கதிர்வீச்சால் பறவை இனம் அழிந்து விடுகின்றன என்கிறார்கள். பெண்களுக்குக் கருச்சிதைவு; ஆண்களுக்கு உயிரணு உற்பத்திக் குறைவு, பக்கவாதம் ஏற்படுகின்றன. சர்வதேச விதிப்படி குடியிருப்புகளிலிருந்து 60 மீட்டர் தள்ளி செல்போன் கோபுரங்கள் அமைக்கப்பட வேண்டும். இதை கருத்தில் கொள்வார்களா?

**-ஜே.துரைராஜ், வளசரவாக்கம்.**

இரண்டு நாடகங்களுக்கு சிறப்பாகவும், சீரியஸாகவும் நிறைகுறைகளைச் சுட்டிக்காட்டி பீஷ்மர் அதுதாங்க 'தேவவிரதன்' எழுதியிருந்த விமர்சனம் அருமை!

**-பி.ஆர். மயிலப்பன், ஈரோடு.**

இருளர் வாழ்வில் ஒளிவிளக்காய் பலவிதங்களிலும் சேவை செய்யும் சமூக ஊழியர் ஏழுமலையை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

**- டி.முரளிநாராயணன், சென்னை.**



## வட்டமேஜை

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்ற 'வீடு' சிறுகதை மிகவும் அருமை!

**-புலவர் இராம.வேதநாயகம், வடமாதிமங்கலம்.**

ஏழு ஸ்வரங்கள்!

## பரிசுக்கடிதம்

**கிழக்கு பதிப்பகம் வழங்கும் ரூ.250/- மதிப்புள்ள நூல்கள் பரிசு பெறும் கடிதம்**

**தமிழக அரசின் 'தறி'கெட்ட நிர்வாகத்தின் காரணமாக, நூல் விலை உயர்ந்து, அதனால் நெச வாளர்கள் கைத்தறித் தொழிலை உதறிவிட்டு வேறு தொழில்களுக்கு மாறுமுன், தமிழகத்தின் பாரம் பரியத் தொழிலுக்குப் புத்துயிரூட்டும் வகையில் தமிழக அரசு நூல் விலையைக் குறைத்து ஏழை நெச வாளர்களின் வயிற்றில் பால்வார்க்க வேண்டும்.**

**- எஸ்.சிவராம ஐயர், காஞ்சிபுரம்**

'போராட்டம்தான் கிரிக்கெட்' என்று தலைப்பில் ச.ந. கண்ணன் எழுதிய கட்டுரை நிஜம்! இலங்கைக் கிரிக்கெட் வீரர் முத்தையா முரளீதரன் கடைசி வரை போராடித்தான் ஜெயித்துக் காட்டியுள்ளார் என்பது யாராலும் மறுக்க முடியாத உண்மை. அதற்கு அவரது திடமான மனமும் அபார திறமையும்தான் மூலகாரணங்கள்.

**-எம்.இராஜேந்திரன், லால்குடி.**

மிக அதிக வாய்ப்புகளை வாசகர்களுக்கு வழங்கும் ஒரே இதழ் என பட்டம் தரலாம். அவ்வளவு போட்டிகள். அத்தனையும் முத்துக்கள். பாலிடிக்ஸ் பஜார் படு இன்டிரஸ்டிங். வித்தியாசமான தகவல்களை அள்ளித் தந்து கவர்கிறது.

**- ராஜிராதா, பெங்களூரு.**

'அப்பாவின் ஞாபகங்கள்' பற்றிய ராஜேஷ் குமாரின் கட்டுரையில் தன் பெற்றோரை விலைமதிக்க முடியாத வைரக் கற்கள் என்றும், அப்பாவிடம் நிறைய கற்றுக் கொண்டதில் முக்கியமானது சகிப்புத்தன்மை என்றும் கூறியுள்ளது அவரின் எழுத்துகளைப் போல விலை மதிக்க முடியாதது.

**- ஆர்.தனபால், பெருங்களத்தூர்**

கல்கி இப்போது ஜெட் வேகத்தில் பறக்கிறது. பக்க வடிவமைப்பு முதல் கல்கியின் மாற்றத்தைப் பெரிதும் பாராட்டலாம். கல்கி கிளினிக் பயனுள்ள பகுதி. 'இந்தியா பாஸிடிவ்' உற்சாகத் தொடர். இரண்டு பக்க நகைச்சுவை, இரண்டு பக்கக் கவிதை என்று அட்டகாசமாக கல்கி மிளிர்கிறது. வாழ்த்துக்கள். கவிதைப் பகுதியில் இன்னும் சற்று பெரிய கவிதைகளை வெளியிடுவது நலம். மிகச் சிறிய குட்டிக் கவிதைகள் கல்கிக்கு உகந்தது அல்ல. மற்றபடி எவ்ரிதிங் பர்ஃபெக்ட்.

**- த.சூரியகுமார், திருப்பூர்.**

ஆடித் தள்ளுபடி என்பது நிஜமாகவே நல்ல திருப்திகரமான தள்ளுபடி விலையில் பொருள்களை வாங்கிக் குவித்த மன நிறைவைக் கொடுக்கிறதா அல்லது தில்லாலங்கடி வேலையா என்று அறியும் ஆவலில், நான்கு பெண்களிடம் கேட்டோம்:




**அபர்ணா சுப்ரமணியம்:** ஆடித் தள்ளுபடி என்பது, என்னைப் பொறுத்த வரை ஒரு ஜாலியான ஷாப்பிங் திருவிழான்னு தான் சொல்லுவேன். தீபாவளி, பொங்கல்னு போய் ஜவுளிகள் எடுக்கறா மாதிரி, ஆடித் தள்ளுபடியை முன்னிட்டாவது டிரெஸ்களை ஜாலியா வாங்கி குவிக்கலாமே. இது ஆடித் தள்ளுபடில வாங்கின டிரெஸ்னு சொல்லிக்கறதுல ஒரு தனிப் பெருமை. நிறைய சதவிகித டிஸ்கவுண்ட் கிடைக்கும், அதனால ஆடித் தள்ளுபடில வாங்கலாம்னு தப்புக் கணக்கு போடக் கூடாது. கூட்டத்தோட கூட்டமா ஏதோ திருவிழாவுக்குப் போறா மாதிரி ஷாப்பிங் செய்வதுதான் ஆடித் தள்ளுபடியின் விசேஷமே.. இதுல வாங்கினா எக்கச்சக்க லாபம் அப்படீங்கறது நிச்சயம் கிடையாது.

**ராதிகா கிருஷ்ணன்:** நான் அமெரிக்காவிலிருந்து குழந்தைகளோட லீவுக்குச் சென்னை வந்திருக்கேன். மற்ற இடங்களைச் சுத்தி பார்க்கறா மாதிரி ஆடித் தள்ளுபடில ஷாப்பிங் செய்வது என்பது ரொம்ப ஒரு த்ரில்லிங்கான விஷயமா நினைச்சேன். ஆனா இந்தக் கூட்டம் யப்பா, தாங்க முடியல.. எங்க பாரு கூட்டம், எதுக்கெடுத்தாலும் கூட்டம், பெரிய பெரிய கடைகள்ல ஷாப்பிங் டிராலியைத் தள்ளிக்கிட்டு போகக் கூட இடம் இல்ல.. அந்த அளவுக்கு கூட்டம். இவ்வளவு கூட்டத்துக்கு நடுவுல சரியா ஷாப்பிங் செய்ய முடியல... நமக்கு என்ன டிரெஸ்


✱ ராதிகா

# தள்ளுபடியா'



வேணும்ங்கறத பொறுமையா பார்த்து செலக்ட் செய்ய ரொம்பவே கஷ்டமா இருக்கு. ஆடித் தள்ளுபடில மிஞ்சுவது தள்ளு இடிதான்.. அமெரிக்காவுல சேல்ஸ் போட்டா இவ்வளவு கூட்டமெல்லாம் நிச்சயம் வரவே வராது..

**மாலினி சத்யநாராயணன்:** ஆடித் தள்ளுபடி என்பது ஒரு நல்ல ஷாப்பிங்கிற்கான காலம். நிறைய விதவிதமான புதுப் புது டிசைன்களை பார்க்க முடிகிறது. விலையும் கணிசமான அளவு குறைச்சுத் தான் கொடுக்கறாங்க என்பதில் சந்தேகமே இல்லை. ஆவணி மாசம் தொடங்கி நிறைய பண்டிகைகள் வந்துகிட்டே இருக்கே... அதுக்கெல்லாம் மொத்தமா சேர்த்து ஆடித் தள்ளுபடில வாங்கிக்கறது புத்திசாலித்தனம். 2,3 வருஷம் முன்னாடி ஆடித் தள்ளுபடில கூட்டம் ரொம்ப அதிகமா இருக்கும். இந்த வருஷம் அவ்வளவு நெரிசல் இல்லைன்னு தான் சொல்லணும். அது என்னவோ ஒரு டிஸ்கவுண்ட் ரேட்ல துணி வாங்கினோம்னு ஒரு பெரிய மனத் திருப்தியைக் கொடுக்குது இந்த ஆடித் தள்ளுபடி.



✱ மாலினி



✱ஹரிணி



✱ அபர்ணா

**ஹரிணி சாய்ராம்:** ஆடித் தள்ளுபடில டிரெஸ் வாங்க ஒரு மாதம் முன்னாடியாவது போய் அந்த கடைல என்னென்ன விலைல புடைவைகள் விக்கறாங்கன்னு பார்த்து ஒரு சின்ன சர்வே எடுத்து வெச்சுகிட்டாதான் ஆடித் தள்ளுபடில நிஜமாவே விலையைக் குறைக்கறாங்களா இல்லயான்னு தெரியும். அப்படி முன்கூட்டியே போய் விலையைத் தெரிஞ்சுக்கற விஷயத்த ரொம்ப பேர் செய்யறோமான்னு தெரியல. அதனால, ஆடித் தள்ளுபடிங்கறதும் எந்தளவுக்கு உண்மைன்னு தெரியல. நிறைய கடைகள்ல இதுவரை விற்பனையாகாத துணிகளை எல்லாம் மொத்தமா மூட்டை கட்டி ஜனங்க தலைல கட்ட ஆடித் தள்ளுபடியை ஒரு ஆயுதமா பயன்படுத்தறாங்களோன்னு கூட நினைப்பேன்.

**- நளினி சம்பத்குமார்**

# தள்ளு இடியா?



# நரேஷ் குப்தா பேட்டி

**அதீதமான நேர்மை காரணமாக தமிழ் நாட்டின் தலைமைத் தேர்தல் அதிகாரியாக நரேஷ் குப்தா பணியாற்றிய காலத்தில் கிளம்பிய விமர்சனங்கள், சர்ச்சைகள், பரபரப்புகள் ஏராளம். முப்பத்தேழு வருட ஐ.ஏ.எஸ். அனுபவத்தோடு கடந்த ஜூலையில் ஓய்வு பெற்றிருக்கிறார் இந்த உத்திரப் பிரதேசத்துக்காரர். அண்ணா நகரில் உள்ள அவரது வீட்டில் சந்திக்கச் சென்றபோது...**

## சட்டத்துக்குப் புறம்பான சொத்துக் குவிப்பு

நான் பார்த்தவரையில் கடந்த முப்ப தாண்டுகளில் வாழ்க்கையில் தார்மீக நெறி முறைகளைக் கடைபிடிக்கவேண்டிய அவசியமில்லை என்ற மனப்போக்கு சமூகத்தில் அதிகரித்துள்ளது. உயர் பதவி வகிக்கும் அரசியல்வாதிகளானாலும் சரி, அதிகாரிகளானாலும் சரி, மக்களுக்கு சேவை செய்வதற்காகவே இந்தப் பதவி யில் இருக்கிறோம் என்ற எண்ணம் குறைந்து போய்விட்டது. சட்டத்துக்குப் புறம்பாகவும் சொத்து சேர்த்தால் தவறில்லை என்ற மனப்பான்மை அரசியல் வாதிகள், அதிகாரிகள், தொழில்துறையினர் என அனைவரிடமும் ஏற்பட்டுள்ளது. இது வேதனைக்குரியது.

## கட் அவுட் -கெட் அவுட்

தேர்தல் கமிஷனின் கடுமையான எச்சரிக்கைகள் மற்றும் நடவடிக்கைகள் காரணமாக தமிழ்நாட்டில் இருந்து கட் அவுட் கலாசாரம் ஒழிந்தது எனலாம்.

இப்போது தேர்தல்களில் கள்ள வோட்டு ஏறத்தாழ இல்லை என்றே சொல்லலாம். அதற்கு வாக்காளர் அடை யாள அட்டையும், போட்டோவுடன் கூடிய வாக்காளர் பட்டியலும் முக்கியக் காரணங்கள்.

# தர்மத்தின் வழி நடப்பது என்பது அபூர்வமான விஷயமாகி விட்டது.

**திருமங்கலம் ஃபார்முலா!**

இன்று தேர்தலில் பெரும் கவலை அளிக்கும் விஷயம் வோட்டுக்குப் பணம் கொடுப்பதும், இலவசங்கள் அளிப்பதும் தான். இது மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் மற்றும் இந்திய தண்டனைச் சட்டத்தின் படி பெரும் குற்றம். தேர்தலின்போது ஏராளமானவர்களுக்குப் பணம் கொடுக்கப்பட்டாலும், அதை ஆதாரபூர்வமாக நிரூபித்து, தண்டனை வாங்கிக் கொடுப்பது மிகவும் கஷ்டம். பெரும்பாலும், வேட்பாளர் நேரடியாக பணம் கொடுக்கமாட்டார். கட்சிக்காரர்கள் வழியாகக் கூட இல்லாமல் மூன்றாம் நபர்கள் வழியாகத்தான் அது நடக்கும். அப்படியே வழக்கு போட்டாலும், பணம் வாங்கிக் கொண்டவர்கள் சாட்சி சொல்ல முன்வரமாட்டார்கள். தேர்தல் நேரத்தில் மட்டும் காவல்துறை தேர்தல் கமிஷனின் கீழ் பணியாற்றினாலும் கூட, அவர்கள் பாரபட்சமின்றி நேர்மையாக நடந்துகொள்ள முடியாத சூழ்நிலை தான் நிலவுகிறது.

## ஒழியுமா திருமங்கலம் ஃபார்முலா?!

**பொய் புகார்கள்!**

தமிழகத் தலைமைத் தேர்தல் அதிகாரி என்ற முறையில் என் மனத்தை மிகவும் நோக வைத்த விஷயம், மாநிலத்தை ஆளும் கட்சியின் தலைவரே என் மீது குற்றம் சாட்டியது. தேர்தல் கமிஷனுக்கு என் மீது புகார்கள் அனுப்பப்பட்டன. கட்சியின் உயர் மட்டக் குழு நேரடியாக தேர்தல் கமிஷனிடம் புகார் அளித்தது. நான் எந்தத் தவறும் செய்யாதபோது இத்தனையும் நடந்தது என்பது இன்னும் வேதனையான விஷயம்.

நான் எப்போதுமே நிறைய பணம் சம்பாதிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டதில்லை. பலனை எதிர்பார்க்காமல் சந்தோஷமாக கடமையைச் செய்வதைப் பெருமையாக நினைத்தேன். இதற்கான மனோபலத்தை எனக்கு அளித்தது பகவத் கீதையும் காந்தியக் கொள்கைகளில் எனக்குள்ள ஆழ்ந்த ஈடுபாடும்தான். படிக்கிற காலத்தில் என்னிடம் எப்போதும் ஒரு பாக்கெட் சைஸ் பகவத் கீதை புத்தகம் இருக்கும்.

**உண்மையை எழுதினால் பிரச்னை வரும்!**

என் பணிக்கால அனுபவங்களைப் புத்தகமாக எழுதுவீர்களா என்று பலர் கேட்கிறார்கள். நான் எழுத விரும்பவில்லை. காரணம், எழுதினால் உண்மைகளை மட்டுமே எழுத வேண்டும். அப்படி எழுதினால் வீண் சர்ச்சைகளும், பிரச்னைகளும் வரும். உண்மையை எழுத இயலாது என்றால், அப்புறம் எதற்கு சுய சரிதை எழுத வேண்டும்?

சந்திப்பு, படம்: எஸ். சந்திர மௌலி




# உறவுகளால் சுழலும் உலகம்!

டிஸ்கவரி சேனல் தமிழில் ஒளிபரப்பை ஆரம்பித்தபின் பார்க்க எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன என்பது தெளிவானது. இயற்கையின் அதிஅற்புதமானத் தருணங்களை, நாம் நேரடியாகப் பார்ப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறது. குழந்தைகள் விரும்பிப் பார்க்கக்கூடிய நிகழ்ச்சிகள் ஏராளம். கார்ட்டூன் சேனல்கள் பார்த்துக் கொண்டிருந்த குழந்தைகளை அறிவுபூர்வமாக தன் பக்கம் இழுத்து வந்த டிஸ்கவரி சேனல்தான் எங்களுடைய பெஸ்ட் சாய்ஸ்.

**-எம்.இசைவாணி, ஆம்பூர்.**



* எஸ்.லோகா



* உமாதேவி

சன் டி.வி.யில் தினமும் பகல் 12.00 மணிக்கு ஒளிபரப் பாகும் 'உறவுகள்' தொடர் என் மனதைத் தொட்ட சீரியல்.

'உறவுகளாலே
உறவுகளாலே
உலகம் சுழல்கிறது
ஏணியாவதும் உறவுதான்
இறக்கிவிடுவதும்
உறவுதான்
விட்டுக் கொடுக்கும்
உறவுகள்
என்றும் கெட்டுப்
போவதுமில்லை'

இந்த அர்த்தமுள்ள பாடலோடு சீரியல் தொடங்கும். இந்த அனுபவரீதியான பாடலால்தான் அது என்னைக் கவர்ந்தது.

**-எஸ்.லோகா, திருநெல்வேலி.**

சன் டி.வி.யில் தினமும் பிற்பகல் 2.00 மணிக்கு ஒளிபரப்பாகும் 'அத்திப்பூக்கள்' தொடர் என்னை மிகவும் ரசிக்க வைத்த பூக்கள். இதன் கதையை இந்திரா சௌந்தர் ராஜன் எழுதியிருப்பது சிறப்பு.

கணவன்-மனைவி ஒன்றுசேர்வார்களா? நல்லவர்களை ஏன் ஆண்டவன் இப்படிச் சோதிக்கிறான்? எனக் கேள்விகளை நம் முன் எழுப்பும், ஆவலுடன் பரபரப்பான காட்சிகளுடன் பறக்கும் 'அத்திப்பூக்கள்' அழகிய பூக்கள்.

**- உமாதேவி, வேட்டவலம்.**

**டி.வி.யில் உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சி எதுவாயினும்... 'சேனல் சாய்ஸ்'என்று குறிப்பிட்டு எழுதுங்க. kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.**

# இறைவனை நெருங்க...

## பலன் தரும் விரதங்கள்!

விரதம் அல்லது நோன்பு என்றால் என்ன? நோன்பு என்பது நோதல். அதாவது தன்னைத்தானே வருத்திக் கொள்ளுதல். எப்படி வருத்துவது... எதுவெல்லாம் மகிழ்ச்சி தருமோ அதை விலக்குவது, இறைவனை நோக்கி மனத்தைத் திசைதிருப்புவது.

எது மகிழ்ச்சியைத் தரும்? விருப்பமான உணவு, ஆடம்பரம், அலங்காரம். இவைகளைத் தவிர்த்து விடுதல் விரதத்தின் முக்கிய அங்கம்.

என்னென்ன விரதங்கள் முக்கியமானவை? அதன் பலன்கள் என்னென்ன?

● ஆடியில் வளர்பிறை சதுர்த்தியில் இருந்து வந்த **நாக சதுர்த்தி விரதத்தை** இப்போது எல்லா ஆடி வெள்ளியிலும் பின்பற்றுகிறார்கள். பாம்பு புற்றுக்குப் பால் வார்த்தல் இதன் விசேஷம். மக்கட்செல்வம் பெறவும், புத்திரர்க்கு ஆயுள் கூடுதலும் இந்த விரதத்தின் பலன்கள்.

● **வரலட்சுமி விரதம்** என்பது ஆடி அமாவாசை கழித்து ஆவணி பௌர்ணமிக்கு முன்பு வரும் வெள்ளியல இருக்கும் விரதம். சின்ன செம்பில் அரிசி நிரப்பி அதனோடு மங்கலப் பொருட்களைச் சேர்த்து வீட்டு வாசலில் வைத்து வரலட்சுமியை வரவேற்பார்கள். சுமங்கலிகளுக்கு மங்கலப் பொருட்களை கொடுத்துக் கொண்டாடுவர். சகலசௌபாக்கியங்களையும் கணவனுக்கு நீண்ட ஆயுளையும் தரும் விரதம் இது.



● **கந்தசஷ்டி விரதம்**-தீபாவளி கழித்து ஆறு நாள் விரதம் இருப்பர். குழந்தைப்பேறு கிட்டுவதற்கான விசேஷ விரதம் இது.

● **ஏகாதசி விரதம்** - நாள் முழுவதும் ஏதும் சாப்பிடாமல் (தண்ணீர் கூட குடிக்காமல்) மறுநாள் காலை நெல்லி, சுண்டைக்காய், அகத்திக்கீரை சாப்பிட்டு விரதம் முடிப்பர். இறைவனுக்கு உரியதாய் நம் உடலும், உள்ளமும் தூய்மையாதல், இறையருள் கிட்டுதல் இதன் பலன்.

**- த.கி.நீலகண்டன்**

# கல்கி

Sri Palsani JEWELS

இணைந்து வழங்கிய

# கோடைக்கால கொண்டாட்ட பரிசளிப்பு!

பல்சானி நிறுவனர் மாதவ் பிகாரி பல்சானி முன்னிலையில் கல்கி இதழின் ஆசிரியர் சீதா ரவி வரவேற்புரை வழங்க, கிரேஸி மோகன் வாழ்த்துக்களோடு, 'கோடைக்கல கொண்டாட்டப் போட்டி'யில் வெற்றி பெற்றவர்களுக்குத் தங்க நாணயங்கள் பரிசாக அளிக்கப்பட்டன.

பல்சானி ஜுவல்லர்ஸ் ஷோரூமுக்குள் 29.7.10 மதியம் 3 மணியளவில் நடைபெற்ற உற்சாகமான பரிசளிப்பு விழாவில்... ''இது அதிர்ஷ்டத்தை மட்டுமன்றி அறிவுத் திறனையும் அடிப்படையாகக் கொண்ட போட்டி. இங்கு வந்திருக்கும் வாசகர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாவட்ட வாசகர்களின் பிரதிநிதி'' என்றார் ஆசிரியர். கிரேஸி மோகன் பேசுகையில், ''பொன் நகைப் பரிசால் முகமெல்லாம் புன்னகையாக இருக்கு. நிரந்தரமாக நமக்குள்ளே இருக்கும் புன்னகையை எதன் பொருட்டும் இழக்காதீங்க. பேர்ல நகை இருந்தாலும் சூர்ப்பனகை நமக்கு வேண்டாம். அறத்தில் பில்டர்ஸாக இருக்கும் கல்கியும் பல்சானி ஜுவல்லர்ஸும் நல்ல காம்பினேஷன்'' என்றார். பொறுப்பாசிரியர் ஆர்.வெங்கடேஷ் நன்றியுரையோடு விழா இனிதானது.



● பல்சானியில் பரிசளிப்பு விழா

● படம் : ஸ்ரீஹரி

# கல்கி

> 15.08.2010
> இதழுடன் இணைப்பு
> 32 பக்கங்கள்



# கோலாகல கோனியம்மன்!

**இணைந்து வழங்குவோர்:**

# கண்டார் வியக்கும் கருணை!

தண்டார் குழலி! தடங்கருணைத்
தாயே! ஞான சாகரியே!
தன்னை அடைந்த அடியாரைத்
தாங்கும் தெய்வத் தண்ணமுதே!
கண்டார் வியக்கும் கவினுடைய
கருணை வடிவே! கைகுவித்துக்
காதலோடு கசிந்துருகிக்
கமல பாதம் தொழுவோர்க்கு
வெண்டா மரையாள் திருமடந்தை
மேவி அளிக்கும் கலைச் செல்வம்
வேண்டும் அளவும் உதவியுயர்
வெற்றி யருளும் வித்தகியே!
வண்டார் பொழில்சூழ் கோவை நகர்
மகிமைக் கோனி வருகவே!
மகிஷா சுரனை வதைத்த தெய்வ
மாதே வருக! வருகவே!!

'கோனியம்மன் வருகைப் பாடல்'
- கோபிகலி - ஞானக்கனி

கோவை கோனியம்மன்




**மா**நகரின் மையப் பகுதியில் அமைந்துள்ளது அருள்மிகு கோனியம்மன் திருக்கோயில். கோவை ரயில் நிலையம் அருகே, டவுன்ஹால் பகுதியில் மாநகரப் பேருந்தை விட்டு இறங்கியதும், கோயில் எங்கே எனத் தேடுகிறோம். காரணம் அதன் முகப்பு கோபுரம் சாலையிலிருந்து சற்றே உள்ளடங்கியே அமைந்துள்ளது.

தற்காலிக நுழைவாயிலின் (திருப்பணி நடப்பதால்) வழியே செல்கிறோம். பஞ்சமுக விநாயகர் சன்னிதி 'பளிச்' எனக் கண்ணில் தெரிகிறது. இவர் இருநூறு ஆண்டுகளுக்கும் மேலான அரச மரத்தடியில், கிழக்கு முகம் நோக்கி அருள்பாலித்து வரு

# கோயில் கொண்ட

கிறார். கோனியம்மன் உட்பட அனைத்து சன்னிதிகளிலும் சுவாமிகள் வடக்கு முகம் பார்த்திருக்க, பஞ்சமுக விநாயகர், ஆகம விதிப்படி கிழக்கு முகமாக அமைந்துள்ளார். காவல் தெய்வம் வடக்கு பார்த்திருக்க வேண்டும் என்பது ஐதீகம்.

கோயில் கோபுரங்களில் புராண, இதிகாசக் காட்சிகளும், தெய்வச் சிலைகளும் இடம் பெற்றிருக்கும். மாறாக இங்கு இருளர்கள் வாழ்வின் அடையாளங்களாகக் குறிசொல்லுதல், மகுடி ஊதுதல், தேன் எடுத்தல்... என சிலைகள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

முன் மண்டப விதானங்களில் அழகிய மீன்கள், அதன் தளத்தில் பாவை விளக்குகளுடன் நடுவே பெரிய குத்து விளக்கு. அடுத்துத் தெரியும் அலங்கார மண்டபத்தில் ஊஞ்சல் பல்லக்கு. முன் மண்டப முகப்பிலிருந்து கீழ்ப்புறமாக விலகி நடந்தால் எதிர்ப்படுவது நவக்கிரக சன்னதி. நவக்கிரக நாயகர்கள் ஒவ்வொருவரும் தத்தமது நாயகியரோடு அமைந்திருப்பது தனிச்சிறப்பு.

எதிரே சாந்த விநாயகர் சன்னிதி. அதனருகில் பூக்கள் சொரியும் நாகலிங்க மரம், அடுத்து ஆதி கோனியம்மன் சன்னிதி. இங்கு கோனியம்மன், மாகாளியம்மன், சப்த கன்னியர்கள்... எழுந்தருளியுள்ளனர். கோனியம்மனின் அக்கா மாகாளியம்மன், ஆதி கோனியம்மன் சன்னிதிகளை விட்டு முன் நகர்ந்தால் தரிசிக்கக் கிடைக்கிறது கல்யாண சுப்பிரமணியர் சன்னதி. வள்ளி தெய்வானையுடன்.

கொடி மரம், பலி பீடம் இருக்கும் மகா மண்டபத்தில் பக்தர்கள் வரிசை கட்டி நிற்கிறார்கள். அர்த்த மண்டபம் கடந்து பார்வை செல்கிறது. அமர்ந்த திருக்கோலத்தில் கோனியம்மன், காவல் தெய்வமாக, துத்தன் எனும் அரக்கன் மீது இடது காலை வைத்து மிதித்தபடி, எட்டுத் திருக்கரங்களுடன் வீற்றிருக்கிறாள். எட்டுத் திசைகளையும் காத்தபடி இங்கு வீற்றிருக்கும் கோனியம்மனே ராஜராஜேஸ்வரி எனவும், அர்த்த நாரீஸ்வரி எனவும் அழைக்கப்படுகிறாள். காப்பவளும் அவளே. அள்ளி அள்ளி வழங்குபவளும் அவளே. மூர்த்தி சிறிதே ஆனாலும் கீர்த்தி பெரிது என்கிறாற் போல, ஒரு ஏக்கர் பரப்பளவு கொண்ட சிறிய கோயில்தான் என்றாலும், கோனியம்மனின் சக்தி மிகமிகப் பெரியது... ●



# அம்மன்!

கோவை கோனியம்மன்

# ஆதி கோனியம்மன் அவதாரம்!

தற்பொழுது இருக்கும் கோவை பேரூருக்கு கிழக்கே இருந்த அடர்வனத்தை அழித்து கோவன் என்ற இருளர்களின் தலைவன் நாட்டை உருவாக்கினான். கோவன்புத்தூர் என அழைக்கப்பட்டு பின்னாட்களில் மருவி கோயம்புத்தூர் ஆனது.

அந்த கோவன் தன் இல்லத்துக்கு வடப்பக்கம் சிறு கோயில் ஒன்றைக் கட்டி, கல் நட்டு தமக்கும், தன் குலத்தாருக்குமானக் குலதெய்வமாக வணங்கி வந்தான். இந்தக் கோயில் கோயம்புத்தூருக்கு வடக்கில் துடியலூருக்குச் செல்லும் வழியில் சங்கனூர்ப் பள்ளத்தருகே பாழடைந்து கிடந்ததை பின்னால் கண்டுபிடித்தனர். இதனை மக்கள் பழைய கோனி அம்மன் கோயில் என்று அழைத்தனர். பிற்காலத்தில் ஆண்ட கோசர்கள், பகைவர்கள் படையெடுப்பின்போது தங்களைக் காத்துக் கொள்ள ஒரு மண் கோட்டை கட்டி அங்கு கோனியம்மனை கோட்டையின் காவல் தெய்வமாகப் பிரதிஷ்டை செய்து வணங்கி வந்தனர். கோசர் ஆட்சி மறைந்த பின்பு சில காலம் இந்தக் கோயில் பூசை இல்லாமல் இருந்தது கண்டு, கொங்கு நாட்டை ஆண்ட மைசூர் மன்னர் கோயிலைப் புதுப்பித்து, நிலங்களை மான்யங்களாக வழங்கி தேர்த் திருவிழாவும், பூஜைகளும் நடத்தும்படி செய்தார்.



சங்ககாலத்து கோசர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட கோனியம்மன் சிலை இன்னும் ஆலயத்தின் மேற்புறத்தில் இருக்கிறது. 'ஆதி கோனியம்மன்' என்ற பெயரில் ஆனந்தக் காட்சியளிக்கிறாள் அன்னை. ●

மன்னன் எவ்வழி, மக்கள் அவ்வழி என்பர். கோவையின் காவல் தெய்வமான ஆளும் மகாராணி கோனியம்மன் வடக்கு நோக்கித்தான் வீற்றிருக்கிறாள். எனவே, கோயில் பிராகாரத்தில் உள்ள எல்லா தெய்வங்களும் வடக்கு நோக்கித்தான் உள்ளன. இதில் சாந்த விநாயகரும் வடக்கு நோக்கி இருப்பது அநேகமாக இத்தலத்தில் மட்டும்தான் இருக்க முடியும். ஆனால் ஆகம விதிகளின்படி விநாயகர் ஆலயம் கிழக்கு நோக்கித்தான் இருக்க வேண்டும் என்பதால், இந்த ஆலயத்தில் நுழைந்தவுடன் அற்புதமான திருக்கோலத்துடன் பஞ்சமுக விநாயகர் கிழக்கு நோக்கியபடி அரசமரத்தடியில் வீற்றிருந்து



# ஐந்து முக விநாயகரின் அர்த்தம்!

அருள்பாலிக்கிறார்.

ஒவ்வொரு மனிதனும் முழுமை பெற கல்வி, செல்வம், வீரம், ஞானம், யோகம் ஆகிய ஐந்து அம்சங்கள் தேவை. அதை ஐந்து முகங்களின் மூலம் தருவேன் என ஆனந்தப் புன்னகை புரிகிறார் பஞ்சமுக விநாயகர். பல்லவ மன்னர்கள் காலத்தில் இந்தக் கோயிலின் சுற்றுப்பிராகாரத்திலிருந்த ஐந்து விநாயகர்களையும் ஒன்றுசேர்த்து பஞ்சமுக விநாயகராக உருவாக்கி வைத்தார்கள் என்ற செவிவழிச் செய்தியும் உண்டு. விநாயகரைப் பொதுவாக எப்படி வைத்து வணங்கினாலும் வஞ்சனையின்றி வரம் தருவார். இங்கோ பக்தர்களின் கோரிக்கையைப் பத்து செவிகளால் கேட்டு பவித்ர அருள்பாலிக்கிறார் பஞ்சமுக விநாயகர்.

மிரட்டல் செவன்

கோனியம்மன்

**கோ**வை மாநகர மக்களின், கோலாகலம் நிறைந்த கொண்டாட்டங்களில் ஒன்று, கோனியம்மன் கோயில் தேர்த் திருவிழா. மதுரை மாநகர மக்களுக்குச் சித்திரைத் தேர்த் திருவிழா போல. திருக்கோயிலின் பெருந்திருவிழா இது. தேரோடும் வீதிகள் நான்கிலும், அன்று கோவை மாநகரமே திரண்டு நிற்கும்.

கோனியம்மன் கோயில் தேர்த் திருவிழா, பதினான்கு நாட்கள் திருவிழா. மாசி மாதம் முதல் செவ்வாய்க்கிழமை 'பூச்சாட்டு' உற்சவம். இரண்டாவது செவ்வாய்க்கிழமை 'அக்னிச் சாட்டு' உற்சவம். கோயிலின் கொடி மரத்தில் அன்று கொடியேற்றப்பட்டு, திருவிழா தொடங்கப்படுகிறது.

மூன்றாவது செவ்வாய்க்கிழமை கோனியம்மன் திருக்கல்யாண உற்சவம். அதன் மறுநாளான புதன் கிழமை திருத்தேர். கோயிலுக்கும் தேரின் இருப்பிடத்துக்கும் இயல்பாகவே இடைவெளி தூரத்தை அதிகப்படுத்திக் கொண்டிருப்பவள் கோனியம்மன். இதுக்கு தக்க காரணமும் இருக்குங்கோ!

✱ இந்தக் கோனியம்மன் கோயில் அருகிலேயே தேர் இருந்தால், சட்டென்று தேர் நிலைக்கு வந்துடும். கொஞ்ச தூரத்தில் இருந்தால்தான், மாநகர மக்கள் மட்டுமில்லாமல், மாவட்ட மக்கள் எல்லோரையும் தேரோடும் வீதிகளில் வரவழைத்து கண்குளிர தரிசனம்

# கோலாகலத் தேரில்

தரலாம் என்று கோனியம்மனே செய்த ஏற்பாடு என்று பக்தர்கள் சொல்கிறார்கள்.

✱ பொதுவாக பெரும்பாலான திருக்கோயில்களைச் சுற்றிலும், தேரோடும் வீதிகள் அமைந்திருக்கும். திருக்கோயில் தேரும், கோயில் அருகே (சற்று தூரத்திலாவது) நிறுத்தி வைக்கப்பட்டி ருக்கும். ஆனால், கோனியம்மன் கோயில் தேரின் இருப்பிடமும், அதன் தேரோட்ட வீதிகளும் அவ்விதம் அமைக்கப்படவில்லை.

கோயிலிலிருந்து ஒரு கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது தேரின் இருப்பிடம். இராஜ வீதியும் கருப்பக் கவுண்டர்







வீதியும் இணையும் திருப்பத்தில், இராஜ வீதியில் நிலை கொண்டுள்ளது திருத்தேர். இராஜவீதி, ஒப்பணக்காரவீதி, வைசியாள் வீதி, கருப்பண்ணக் கவுண்டர் வீதி ஆகிய நான்குமே தேரோடும் வீதிகள். இவற்றின் மொத்த நீளம் சுமார் நான்கு கி.மீ. தூரம்.

புதன்கிழமை அதிகாலை உற்சவ அம்மன் அலங்கரிக்கப்பட்டு, பெரிய கடை வீதி, வைசியாள் வீதி, கருப்பக் கவுண்டர் வீதிகள் வழியாக வீதியுலாவாகச் சென்று தேர் இருப்பிடத்தை அடைகிறாள்.

திருத்தேர் பீடத்தின் மீதேறி எழுந்தருளி, அன்று மாலை வரை தன்னை நாடி வரும் பக்தர்களுக்கு சேவை சாதிக்கிறாள். அன்று மதியம் இரண்டு மணிக்குக் கோயில் முகப்பிலிருந்து பக்தர்கள் மற்றும் பிரமுகர்கள் மேள தாளங்களின் முழக்கங்களோடு கிளம்பிச் செல்கின்றனர்.

தேர்த் திருவிழா இத்துடன் முற்றுப் பெற்று விடுவதில்லை. கோனியம்மனுக்கு கோவை மக்கள் மீது மாளாத பாசம். பேரன்பு. அதனால், தேரிலிருந்து கீழிறங்கி வந்து எழுந்தருளி,

# கோவை காக்கும் கோனியம்மன்!

மீண்டும் நான்கு வீதிகளிலும்.... 'ஹாய்'ஆக வீதி வலம் வருகிறாள். ஒவ்வொரு வீதியாக வலம்வந்த பின்னர், உற்சவ அம்மன் கோயில் சன்னதி வந்தடைய நள்ளிரவுக்கும் மேல் ஆகிவிடும்.

''ஒரு தாயின் அரவணைப்பு போல, அன்று ஒரு நாளிலே மீண்டும் மீண்டும் எங்களை நாடி வந்து பார்த்து, நலம் விசாரித்து விட்டுச் செல்கிறாள் எங்கள் அன்னை கோனியம்மன்!'' எனச் சிலாகிக்கின்றனர் கோவை மக்கள்.

கோயிலில் நான்கு வேளை பூஜா காலம். காலை ஆறு மணி அபிஷேகம். பாலும் பழமும் நைவேத்யம். எட்டு மணிக்கு கால சந்தி பூஜை. நைவேத்யம், வெண்பொங்கல், சர்க்கரைப் பொங்கல். புளியோதரை, தயிர்சாதம். நண்பகல் பன்னிரண்டு மணிக்கு உச்சிகாலப் பூஜை. இரவு ஏழு மணிக்கு சாயரட்சை, எலுமிச்சை, கல்கண்டு சாதம். இரவு எட்டரைக்கு அர்த்தஜாமம். பால் நைவேத்யம்.

✱ திருமணம் கைகூடி வராமல் தடைபட்டு இருப்பவர்கள், தங்கத்தில் மாங்கல்யத்தின் பொட்டுத் தாலி செய்து அம்மனுக்கு சாத்துகிறார்கள். பூஜை முடிந்து பொட்டுத் தொலி, குறிப்பிட்டக் கல்யாணப் பெண்ணிடம் தரப்படுகிறது. அவர் அதைக் கோயில் உண்டியலில் காணிக்கையாகச் செலுத்துகிறார்.

✱ ஒருமுறை உண்டியல் பிரித்துப் பார்வையிட்ட போது, மொத்தக் காணிக்கையாக கால் மெட்டி முதல் கை வளையல் வரை ஒரு மணப்பெண்ணுக்கு உரித்தான குறைந்தபட்ச ஆபரணங்கள் அதில் இருந்துள்ளன. திருமண வேண்டுதல் நிறைவேறிய குடும்பத்தினர், மீண்டும் கோயிலுக்கு வந்து காணிக்கைச் செலுத்தியிருக்கலாம் எனக் கூறப்படுகிறது.

✱ உடல்நலம் குன்றியவர்கள், கண்ணடக்கம் - காலடக்கம் - உருவாரம் வாங்கிக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர்.

✱ ஆடி வெள்ளிக்கிழமைகளில் கோனியம்மனுக்குச் சிறப்பு அலங்காரங்கள். முதல் வெள்ளியன்று ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி அம்மன் அலங்காரம். இரண்டாவது வெள்ளி அன்னபூரணியாக. மூன்றாவது வெள்ளி மீனாட்சியாக. ஆடிப்பூர நட்சத்திரத்தன்று ஆண்டாளாக. நான்காவது வெள்ளி மகாலெட்சுமியாக அலங்காரத்தில் கோனியம்மன் கோலாகல கோனியம்மனாக அருள் பாலிக்கிறாள்.

# வருக... வழிபடுக... வளம் பெறுக!





# சிவசக்தியின் சூட்சுமம்!

கருவறையில் காட்சி தரும் கோனியம்மன் அர்த்தநாரீஸ்வரின் அர்த்தத்தைப் பறைசாற்றியபடியிருக்கிறாள். அதன் அடையாளமாய் வலது செவியில் குண்டலமும் இடது செவியில் தோடும் காணப்படுகிறது. அம்மனின் வலது கைகளில் ஒன்று அபயம் அளித்து தாய்மையின் கருணையை வெளிப்படுத்துகிறது. மீதி மூன்று கரங்களில் வாள், உடுக்கை, கிளி ஏந்தியிருக்க இடதுகைகள் நான்கிலும் கமண்டலம், மணி, சக்கரம், அக்னி ஏந்தி அரக்கனின் மேல் ஒரு கால் பதித்து, இன்னொரு காலை மடித்தபடி காட்சியளிக்கிறாள். மென்சிரிப்பும் அரக்கனை வதம் செய்யும் பொருட்டு எழுந்த உக்கிரக் கோபமும் கலந்த அபூர்வத் தன்மையோடு, வடக்கு பார்த்தபடி பக்தனுக்கு வளம் அளிக்க பாசத்தோடு காத்திருக்கிறாள் கோவை கோனியம்மன்.



# நாயகர்கள்!

நவக்கிரக நாயகர்கள், மற்ற ஆலயங்களில் தனித்திருப்பது போல் இல்லாமல் இங்கு தத்தமது தேவிகளுடன் தம்பதி சமேதரராய் காட்சியளிப்பது விசேஷம். மக்கள் தங்கள் தோஷநிவர்த்திக்கு ஏற்ப பலவித பரிகாரங்களாக ஆடைகள் சாத்துதல், நெய் விளக்கு ஏற்றல், நவதான்யம் இறைத்தல், நிவேதனங்கள் செய்தல் மூலம் தோஷங்கள் நீங்க வேண்டிக் கொள்வர். தனியாக இருக்கும் நவக்கிரக நாயகர்கள் ஏகாங்கிகளாக வீற்றிருப்பர். அதைவிடத் துணையுடன் இங்கு அமர்ந்திருக்கும் நாயகர்களை வேண்டி நின்றால், துணைகள் உடன் இருக்கும் சந்தோஷத்தில், வேண்டும் மக்களின் தோஷத்தை சீக்கிரமாகப் போக்கி ஆனந்தம் கொள்ளச் செய்வார்கள். அதுதான் இந்த ஆலயத்தின் விசேஷம் என்கிறார்கள். ராகு காலத்தில் விளக்கேற்றி வழிபடுவதை ஆதிகோனியம்மன் முழு மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டு காரியங்களை நடத்திக் கொடுக்கிறாளாம்.


சந்திரன்


செவ்வாய்

குரு - தாராதேவி,
ராகு - ஹிம்ஹிகாதேவி,
சனி - நீலாதேவி,
சூரியன் - உஷாதேவி, பிரத்யுஷா தேவி, சந்திரன் - கிருத்திக ரோஹிணி (இரு மனைவிகளுடன்)
சுக்கிரன் - சுகீர்த்தி, புதன் - ஞானதேவி,
செவ்வாய் - சுகிதிதேவி,
கேது - சித்ரலேகா... என தேவிகளோடு இங்கு நவக்கிரக நாயகர்களைத் தரிசித்து விரைந்து வரம் பெற்றுத் திரும்பி வரலாம்.


ராகு

கோலாகல கோனியம்மன்


சிரமங்களைக் கிழித்துப்போட
சீறிவரும் சிம்ம வாகனத்தில்...


சகல சௌபாக்கியத்தைக் கனிவோடு வழங்க
காமதேனு மீதேறி...


கூடும் பக்தர்களின் நடுவே
குறை தீர்க்க குதிரை வாகனத்தில்...



வாகன



யாமிருக்க கில் யேன்-அச்சம் தவிர் என்றபடி
புலிமீது அமர்ந்து புன்னகைக்கும் தேவி



சுகம் கொடுப்பேனெனச் சொல்லியபடி
சுக (கிளி) வாகனத்தில்...



நன்மை-தீமைகளை
பிரித்துக் கொடுக்க
அழகு நடை
அன்ன வாகனத்தில்...



வேண்டிய வெற்றிகளை விளைவிக்க...
வெள்ளை யானை வாகனத்தில்!



கோவை கோனியம்மன்

# தெய்வங்களின் கூடுகை!

மாகாளி அம்மன்



சப்த கன்னிகள்

வனதேவதையான கோனியம்மன் குடியிருக்குமிடத்தில் மகாகாளியம்மனும் (கோனியம்மனின் மூத்த சகோதரி என்று கோவையில் பலரும் மகாகாளியைக் குறிப்பிடுவர்) மகாமுனியும் கூடவே சப்த கன்னியர்களும் இங்கு கூடியிருக்கிறார்கள்.

எப்போதும் போல் வள்ளி-தெய்வானை சகிதமாக ஸ்ரீ சுப்ரமணியரும் அவரின் அண்ணன் விநாயகரும் தனித் தனி சந்நிதியில் அருள்பாலிப்பதால் இங்கே இறையருள் நிரம்பி வழிகிறது. ஒட்டு மொத்த அருளையும் அள்ளிக் கொள்ள மக்கள் ஓடி வருவதில் வியப்பேதுமில்லைதான்.



சுப்ரமணிய சுவாமி

கோவை கோனியம்மன்

# உறவுகளைத் தீர்மானிக்கும் உப்புக்கூடை!

**கோ**வைப் பகுதியில் திருமணம் உறுதியானால் அதற்கு முக்கியமான சடங்கு உப்புக் கூடை மாற்றிக் கொள்வது. இந்த நிகழ்ச்சி கோவை கோனியம்மன் கோயிலில்தான் நடைபெறும். பெண், மாப்பிள்ளை இருவீட்டாரும் தலா ஒரு பிரம்புக் கூடையில் உப்பு, அதன் மேல் மஞ்சள் கட்டைகள், குங்குமம், பூ, பழம், வெற்றிலைப் பாக்கு, மூன்று அல்லது ஐந்து தேங்காய்கள், மிட்டாய், கல்கண்டு வைத்து அம்மன் சன்னிதி முன் இரண்டு வீட்டாரது சம்மதத்தையும் உறுதிசெய்து கொண்டு கூடைகளை மாற்றிக் கொள்கிறார்கள். அதற்கு முன் பெண்ணும், பிள்ளையும் பெரியவர்கள் கண் படும் தொலைவில் சென்று ஒருவருக்கு ஒருவர் கலந்துரையாடி தங்கள் சம்மதத்தைப் பெற்றோரிடம் வந்து தெரிவிக்கின்றனர்.


உப்புக் காணிக்கை

இந்த மாதிரி கோனி அம்மன் முன் நிச்சயம் செய்யப்படும் திருமண உறவு, அம்மன் அருளால் வாழையடி வாழையாகத் தழைத்து வளரும் என்று நம்புகின்றனர். உப்பு மாற்றிக் கொண்டு பின் இருவீட்டாரும் தங்கள் சுற்றத்தினருடன் ஒன்றுகூடி அம்மனுக்கு அபிஷேகம் செய்து அலங்கரித்து வணங்குகின்றனர்.

கல்யாண அழைப்பிதழ் அடித்தவுடன் முதல் அழைப்பிதழை அம்மன் காலடியில் வைத்து வணங்கி அம்மனுக்கு முதல் அழைப்பு விடுகின்றனர். திருமாங்கல்யமும் அம்மன் காலடிகளில் வைக்கப்பட்டு பூஜை செய்யப்படுகிறது. உன்னத உறவுகளை அம்மன் முன் பரிமாறிக் கொள்ளும் உப்புக் கூடைகளே தீர்மானிப்பதால்... சுபமுகூர்த்த தினங்களில் ஆயிரக்கணக்கில் பெண், மாப்பிள்ளை என இரு வீட்டார்களும் உப்புக் கூடைகளுடன் கோனியம்மன் சன்னதியில் கூடி நிற்பதை காண்பது கண்கொள்ளாக் காட்சி. அதுமட்டுமின்றி தங்களது கோரிக்கைகளை நிறைவேற்றிய அம்மனுக்கு பக்தர்கள் அளிக்கும் உப்புக் காணிக்கையையும் உள்ளன்போடு ஏற்கிறாள் உன்னத தெய்வம் கோனியம்மன்..



# கோமகளாகிய கோனம்மையே!

கோவையைப் போலிதழ் வாயினைக் கொண்டு குலப்பிடிபூக்
கோவையைப் பூண்டருள் கோமதி ஸ்ரீமதி குண்டலியென்
கோவையைப் பூணணி கொற்றவை நற்றவர் கூட்டுறவால்
கோவையைக் காத்தருள் கோமகளாகிய கோனம்மையே!

ஓமன்ன மூலப்பொருளாகிய ஊனென்ன மாயத்துழலாதே
நாமன்ன ஓதிக் கவிபாடி நானுன்னை நாடத்தருவாயே
பூமன்ன வர்க்குவுபதேசம் போய் முன்னர்ப் போதித்தருள்வாயே
கோமன்னர் கோலக் குகவேளே கோனம்மை கோயிற்பெருமானே!

செல்வம்வரும் பிள்ளைவரும் சீர்வளர்க்கும் கல்விவரும்
மல்கும்பொன் மேனிவரும் மாண்புவரும் - வெல்லுமெழிற்
கோவைநகர்க் கோனியெனும் கொற்றவையைப் பக்தியுடன்
சேவை செய்யும் செம்மனத்தோர்க்கே!

சீர்வளரும் கல்வியோடு செல்வநிறை ஆயுள்புகழ்
ஏர்வளரும் மக்கட்பே றெய்துங்காண் - பார்மிசை நல்
வாழ்வுவரும் வன்கோவைக் கோனியம்மன் மாணடிகள்
தாழ்ந்து தொழும் அன்பர்க்கே தான்!

- தவத்திரு சுந்தரசுவாமிகள் இயற்றியது.
(கோனியம்மன் வாழ்த்துப்பா)

கோவைநகர் கோனியெனுங் கொற்றவையை வந்திப்போர்
காவைநிகர் செல்வமொடு கல்வியையும் - மேவிய
புத்திரப் பேறு முதலாகப் பெற்றுயர்ந்து
முத்தியும் பெற்றுய்வார்கள் முன்!

(தனிப்பாடல்)





இறைமை வெளிச்சம்

கோலாகல கோனியம்மன்

ஒவ்வொரு மாதமும் புதியதாய்த் துவங்கும் போது 'மாதப் பிறப்பு உற்சவம் நடைபெறும். கோலாகலமாய் புதிய மாதத்தை துவக்கி விடுகிறாள் கருணைமிகு கோனியம்மன். அம்மாதம் நிறைவு பெறுகையில் உற்சவர் கேடயத்தில் அழகுற எழுந்தருளி அருள்பாலிக்கிறார். பளபளக்கும் பௌர்ணமி வெளிச்சத்தில் உற்சவர் புறப்பாடு நிகழ்ந்து முழுமதியாய் நம்முள் மனம் குளிர்வாள் கோனியம்மன். அம்மன் ஆடி மகிழும் விழாக்காலமான ஆடி வெள்ளிக் கிழமைகளில் (ஒவ்வொரு வெள்ளியன்றும்) ஒவ்வொரு அலங்காரத்தில் ஊஞ்சலில் ஆடுவதைக் காண்கையில் மானுடப் பிறப்பின் மகிமை தெரியும். ஆடி முழுதும் அம்மனுக்கு ஊஞ்சல் காலம்தான்.

**ஆடி வெள்ளி:**

ஆடி மாதத்தில் வரும் ஐந்து வெள்ளிக் கிழமைகளில் கோனியம்மன் ஐந்து விதமான அலங்காரங்களில் திருக்கோயில் மண்டபத்தில் காட்சி தருவாள்.

## உற்சவக் காலங்கள்

முதல் வெள்ளி - ஸ்ரீராஜராஜேஸ்வரி

இரண்டாம் வெள்ளி - ஸ்ரீ அன்னப்பூரணி

மூன்றாம் வெள்ளி - ஸ்ரீ மீனாட்சி

நான்காம் வெள்ளி - ஸ்ரீ ஆண்டாள்



# பௌர்ணமி வெளிச்சத்தில்

**ஐந்தாம் வெள்ளி - ஸ்ரீ மகாலட்சுமி**

ஐந்து வெள்ளிகளிலும் அபிஷேகமும் ஆராதனையும் கோனியம்மன் கோயிலைச் சொர்க்கமாக மாற்றிவிடும்.

**மாங்கல்யப் பூஜை:**

மாங்கல்ய பலம் நிலைக்க வேண்டிய பெண்கள் பச்சை, சிவப்பு வளையல்களை அம்மன் முன்வைத்து பூஜைகள் நடத்துவர்.

சித்திரைக்கனி அன்று சகல விதமான பழங்களையும் கொண்டு அம்மனை அலங்கரித்து மகிழ்ச்சி திக்குமுக்காட வைப்பார்கள்.

அமாவாசைக் காலங்களில் காவல் தெய்வமான கோனியம்மனுக்கு விசேஷ சக்தி கூடிவிடும் என்பது ஐதிகம். எனவே, அந்தக் காலங்களில் அம்மனிடம் கோரிக்கை வைக்கும் பக்த கோடிகளின் நெரிசல் சொல்லி மாளாது.

**மார்கழி காலம் மனம் குளிரும் அம்மன்:**

மார்கழி மாதம் முப்பது நாளும் அதிகாலையிலிருந்தே பஜனையோடு கோயில் களைகட்டத் துவங்கிவிடும். தொடர்ந்து முப்பது நாட்களும் பூஜைகள் நடைபெறும். உடல் குளிரும் மார்கழியில் மனம் குளிரும் பூஜை, வாழ்வை குளிர்ச்சியாக்கி விடும்.

**தைப்பொங்கல் பூஜை:**

தை மாதத்தின் ஐந்து வெள்ளிக்கிழமைகளிலும் அலங்காரமும் விசேஷ ஆராதனையும் பெண்கள் பொங்கல் வைப்பதும் தொடர்வதால் கோவையே பொங்கல் வாசத்தால் மூழ்கியிருக்கும்.





**தீப ஒளியில் தேவி :** தீபாவளியும் கார்த்திகையும் கோயில் முழுக்க அகல் விளக்கு அலங்காரத்தில் மின்னும். நட்சத்திர மண்டலமே கோவைக்குத் திசைமாறி வந்தது போல் தீபஒளியில் ஜொலிக்கும். ஜெகஜோதி என்பார்களே அதன் பொருள் இவ்விரு மாதங்களில் அம்மனைப் பார்த்தால் அர்த்தம் புரியும்.

# பவனி வரும் முழு நிலவு!

இறைமை கேள்

கோவை கோனியம்மன்

கோனியம்மன் கோயிலில், புரட்டாசி மாதம் அமாவாசை மறுநாளிலிருந்து தொடங்குகிறது நவராத்திரி உற்சவம். இது கோவை மாநகர மக்களின் மாபெரும் உற்சாகங்களில் ஒன்று. கோனியம்மன், அவர்களுக்குக் காவல் தெய்வம் மட்டுமல்ல, கல்வி, செல்வம், வீரம் ஆகிய மூன்றினையும் வழங்கி அருள்பாலித்து வருபவள். அதனால்தான் நவராத்திரி உற்சவத்தின் முதல் மூன்று நாட்களுக்கு, பார்வதி தேவி அலங்காரத்தில் கோனியம்மன் காட்சியளிக்கிறாள். அடுத்த மூன்று நாட்களுக்கு, லட்சுமி தேவி அலங்காரம். கடைசி மூன்று நாட்களுக்கு சரஸ்வதி தேவி அலங்காரம்... என நவராத்திரி உற்சவ நாட்களில் கோனியம்மன் முப்பெருந்தேவியர்களாகத் தோற்றம் கொள்கிறாள்.

## நவராத்திரி மூவர்!



**மா**சி மாதம் முதல் செவ்வாய்க்கிழமை நடைபெறுகிறது பூச்சாட்டு. அப்படின்னா என்னங்கோ...? ஆறடி உயரம் கொண்ட அரச மரக் கம்பத்தை, ஒக்கிலியர் வீதி செல்வ விநாயகர் கோயிலிருந்து கொண்டு வர்றாங்க. அதை கோனியம்மன் கோயில்ல வெச்சு, பூஜை பண்றாங்க. பின்னர், அந்தக் கம்பத்தைச் சுமந்து கொண்டு, தேரோடும் வீதிகள் வழியாக வீதி வலமாக எடுத்து வர்றாங்க. வீதிவலம் முடிஞ்சதும், கோனியம்மன் கோயிலுக்கு மீண்டும் கொண்டு வர்றாங்க. கோயில் முகப்புல அதை நட்டு வெச்சு, அதன் மீது பூச்சரங்களைச் சுத்துறாங்க. பூக்களைச் சாத்துறாங்க. இதுதாங்க பூச்சாட்டு!



**பூ**ச்சாட்டு அன்னைக்கி நட்ட அரச மரக் கம்பத்தைவிட, கொஞ்சம் உயரம் ஜாஸ்தியான கம்பம். அதை, செல்வ விநாயகர் கோயிலேர்ந்து எடுத்து வந்து, கோனியம்மன் கோயில்ல வைத்து பூஜை பண்றாங்க. மாசி மாதம் இரண்டாவது செவ்வாய்க்கிழமையன்று பூஜை முடிந்ததும், தேரோடும் வீதிகள் நான்கிலுமாக வீதி வலமாக மீண்டும் கோயில் வந்து சேருது அந்தக் கம்பம். முதல் செவ்வாய் அன்னைக்கு நட்டு வெச்ச பூச்சாட்டு கம்பத்தை உருவிட்டு, அதே எடத்துலயே இந்தக் கம்பத்தை நட்டு வைக்கிறாங்க. அந்தக் கம்பத்துக்கு கீழே, அக்னி சட்டிகளை வெச்சு சுவாமி கும்பிடுறாங்க. இதுதாங்க அக்னி சாட்டு! இந்த அக்னி சாட்டுக்குப் பிறகுதான் தேர் விழாவுக்குன்னு கோயில்ல கொடி ஏத்துவாங்க.

# பூவும் அக்னியும்... இரண்டுமாக இனிப்பவள்!

"இளம்தலைமுறையினர் விருப்பத்தைக் கவரும்வண்ணம் சேலைகளை, குறிப்பாக பட்டுப்புடைவைகளை வடிவமைப்பதுதான் சவாலான விஷயம். சேலை, விசேஷங்களுக்கு மட்டுமே உடுத்திக்கொள்ளும் உடை என்ற எண்ணம் நகரத்தில் மட்டுமல்ல கிராமத்தில்கூட பரவி இருப்பதால்தான் இந்தச் சவால்" என்கிறார் ஆரெம்கேவியின் மானேஜிங் பார்ட்னர் சிவக்குமார்.



சிவக்குமார்

"பட்டுப் புடைவையாகவே இருந்தாலும், ரொம்பக் கனமான புடைவைகளைக் கட்டிக்கொள்ள இந்தக் கம்ப்யூட்டர் யுக யுவதிகள் விரும்புவதில்லை. அவர்களுக்கு ஏற்றவாறு பட்டின் தரமும், மெருகும் சற்றும் குறையாமல் அதேசமயம் மிக மிக இலேசான தன்மை கொண்ட லைனோ லைட் பட்டுப்புடைவைகளை அறிமுகம் செய்தோம். பெண்களின் ஆதரவு இந்தவித புடைவைளுக்கு அபரிமிதமாகவே கிடைத்திருக்கிறது. வர்ணஜாலப் புடைவையும் எங்களது பெருமையான அறிமுகமே" என்கிறார்.



# ஆரெம்கேவி

"இளம்பெண்களின் எண்ணத்திற்கேற்ப வண்ணமும், கைவண்ணமும் பட்டுப்புடைவையில் மிக அவசியம். பாட்டி காலத்து டிசைன்கள் அவர்களிடம் செல்லுபடியாகாது. எங்களது சூப்பர் ஹிட் 50,000 நிறங்கள்கொண்ட பட்டுப் புடைவை சமீபத்தில் அதிகமான வரவேற்பைப் பெற்றவற்றில் முக்கியமானது. அதில் உள்ள நிறங்களிலிருந்து தங்களுக்குப் பிடித்தமான கலரை மணப்பெண் சொல்லி விட்டால் போதும், அப்பெண்ணுக்கேற்ற

டிஸைனில் புடைவையைத் தயார் செய்து கொடுத்து விடுவோம். வாழ்க்கையில் ஒவ்வொருவருக்கும் மண நாள்தான் மறக்க முடியாத நாள். அவர்கள், அன்றைய தினம் தாம் யாருமே இதுவரை கட்டாத ஒரு புதுவித நிறத்திலும், தமக்குப் பிடித்தமான டிஸைனில் புடைவை கட்ட வேண்டும் என்று நினைக்கிறார்கள். அப்படிப்பட்டப் பெண்களுக்கு 50,000 வண்ணம் கொண்ட புடைவை மிகப் பெரிய வரப் பிரசாதம்'' என்றவரிடம், ''நல்ல பட்டுப் புடைவையைத் தேர்ந்தெடுக்கும் டிப்ஸ் ஏதாவது சொல்லுங்களேன்'' எனக் கேட்டால், ''மூன்றே மூன்று விஷயங்கள்தான். தரமான பட்டுப் புடைவை வாங்க நல்ல பெயர் எடுத்துள்ள கடைக்குப் போங்க. அங்கே விற்கப்படும் புடைவை நிச்சயம் நூறு சதவிகிதம் தரமான புடைவையாகத்தான் இருக்கும். சந்தேகமே வேண்டாம். அடுத்து, புடைவை... கனமாகவும், அழுத்தமாகவும் இருக்கான்னு பாருங்க அது போதும்'' என்கிறார் சிவக்குமார்.

- என்.எஸ்.கே.



## கோவை கோனியம்மன்

கூர்ந்து நோக்கினால், காளி போலக் காட்சியளிக்கிறாள். துணிந்து பார்த்தால், துர்க்கை போலத் தோன்றுகிறாள். கோனியம்மனின் தோற்றம் அப்படி. உள்ளமோ வாரி வாரி வழங்குவதில் அன்னை இராஜ ராஜேஸ்வரி. காக்கும் கருணை மிகுந்த அவள் அர்த்த நாரீஸ்வரி.

எப்பேர்ப்பட்ட தீய சக்திகளையும் அழிக்கக்கூடிய வல்லமை படைத்தவள். அதற்குச் சான்று, கோனியம்மன் காலடியில் வீழ்ந்து கிடக்கும் துத்தன் எனும் அரக்கன். அவன் பலத்தை ஒடுக்கி, வீர வாளால் சிரசை வெட்டி வீழ்த்தி வீரம் சூடியவள். தம்மை நாடி வரும் பக்தர்கள் கேட்கும் வரங்களை எல்லாம் நிறைவேற்றித் தருகிற சூட்சுமக்காரி.



பணக்காரப் பெண்மணி ஒருவரின் மகள் மும்பையில் வசித்தார். மகன் அமெரிக்கா வாசம். ஐம்பது வயது கடந்த அம்மிணிக்கு வயிற்றில் திடீர் திடீரென வலி. சேலத்தில் மருத்துவம் பார்த்துள்ளார். மாத்திரைகள் எடுத்துக் கொண்ட சில நாட்களுக்கு வலி இல்லை. நான்கைந்து நாட்கள் சென்ற பிறகு, அழையாத விருந்தினர் போல மீண்டும் வந்து விடும் வயிற்று வலி. வலி யிலிருந்து விடுபட்டாக

வேண்டுமே. மும்பை மகள் வீட்டுக்குச் சென்று தங்கி, அங்கு மருத்துவம் பார்த்துக் கொள்ள முடிவு செய்தார்.

மும்பை மருத்துவப் பரிசோதனையில், வயிற்றில் கட்டி எனத் தெரிய வந்தது. கட்டியைக் கரைக்க மருத்துவ முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அந்த முயற்சிக்கு முன்னரே மருத்துவர், அந்தப் பெண்மணியை உயிர் இழக்கும் அபாயக் கட்டத்தில் இருப்பதாக எச்சரித்துள்ளார். 'மருத்துவம் அது வழியில் நடந்து கொண்டிருக்கட்டும். நீங்கள் எதற்கும் ஒருமுறை கோவை கோனியம்மன் கோயில் சென்று வேண்டிக் கொள்ளுங்கள். உங்கள் பிரார்த்தனை பலிக்கும்!' எனக் கூறியுள்ளார் ஒருவர்.

கோனியம்மன் கோயில் வந்தவர், பிரதி செவ்வாய்க்கிழமை ராகு காலத்தில் ஆதி கோனியம்மனுக்கு எலுமிச்சம் பழத்தில் நெய் விளக்கேற்றி வழிபட்டு வந்துள்ளார். முப்பது நாட்கள்தான். என்ன விந்தை. வயிற்றில் வலி இல்லை. ஸ்கேன் செய்து பார்த்ததில் வயிற்றில் கட்டியும் காணவில்லை.

கும்பகோணத்தில் ஒரு குடும்பத்தினருக்கு பெண் வாரிசுகளே பிறக்காமல் இருந்துள்ளது. கோனியம்மன் கோயில் வந்து, தேங்காய் உடைத்து, அதன் மூடிகளில் நெய் விளக்கேற்றி வழிபட்டு வந்துள்ளனர். அடுத்த ஒரு வருடத்தில் அந்தக் குடும்பத்தில் ஒரு தம்பதியினருக்கு அழகான பெண் குழந்தை! அவர்கள் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

# மட்டற்ற மகிமை கொண்டவள்!

"இது போல நிறைய சம்பவங்களைச் சொல்லலாம். பிரதி செவ்வாய் ராகு கால பூஜை இங்கு மிகச் சிறப்பு. எலுமிச்சையில் தீபமேந்தி வணங்கி பிரார்த்திப்போருக்கு, வேண்டுவன அளித்துக் காத்து வருகிறாள் கோனியம்மன். திருமணத்தடை நீக்கம், காரியத் தடை நீக்கம், நோய் நொடி அகலுதல், கல்வி, செல்வம்... என எது வேண்டுமெனக் கோரிக்கை வைக்கிறோமோ அதனை அவரவர் மனசு கோணாமல் செய்து தருபவள் கோனியம்மன்!" என்கிறார் திருக்கோயில் புலவர் ம.சிவசங்கரி.

விரைடல் சேவன்

# தயாள மனதுக்காரிக்கு தங்கப் பாவாடை!



**பொ**துமக்களின் விருப்பத்துக்கேற்ப காணிக்கையாக வரப் பெற்ற, உண்டியல் திறப்பு மூலம் கிடைக்கப் பெற்ற பொன் இனங்களைப் பயன்படுத்தி, அம்மனுக்கு தங்கப் பாவாடை தயாரிக்கப்பட்டுள்ளது. கோனியம்மன் திருமார்பு, வலது ஹஸ்தம், இடது ஹஸ்தம், தலைக் கிரீடம் ஆகியவைகளுடன் இடுப்புக்குக் கீழேயான பொன் விரிப்பும் உள்ளடக்கிய தங்கப் பாவாடை, அரசின் அனுமதிப் பெற்று செய்து முடிக்கப்பட்டுள்ளது.

பக்தர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, தங்கப்பாவாடை சாத்துப்படி திட்டமும் செயல்பட்டு வருகிறது. ஐந்நூறு ரூபாய் கட்டணமாக வசூலிக்கப்படுகிறது.

# தொட்டது துலங்குது!



❋ எஸ்.கிருஷ்ணராஜ்

**"கா**ப்பு தெய்வம்னு கோனியம்மனைச் சொல்வாங்க. இருளர்கள் செல்வாக்காய் இருந்த காலத்தில் உருவான கோயில் இது. இந்த அம்மன் கொங்கு மண்டலத்தின் காவல் தெய்வம் மட்டுமல்ல, பிரார்த்தனைகளின் சங்கமமாகவும் அருள்பாலித்து வருகிறாள். அம்மனிடம் வேண்டி பலிக்காத காரியம் இதுவரை எதுவுமில்லை. புதிய தொழில், வியாபாரம் தொடங்கும் போது கோனியம்மனின் உத்தரவுக்குப் பிறகே துவங்குகின்றனர். அத்தனையும் துலங்குகிறது!'' என்கிறார் பூசாரி எஸ்.கிருஷ்ணராஜ்.

கோனியம்மன்

# இனி, கோபுர தரிசனம்!



மதுரை மாநகரில் எங்கிருந்து பார்த்தாலும் மீனாட்சியம்மன் திருக்கோயிலின் இராஜகோபுரம் தெரிவது போல, கோவை மாநகரிலும் கோனியம்மன் கோயிலுக்கென முற்றிலும் புதிதாக இராஜகோபுரம் கட்டப்பட்டு வருகிறது. திருப்பணி முழுவதும் கல்லினால் ஆன கல்காரமாம்.

சிற்பிகளின் சிற்றுளிகள் ஒருவித தாள லயத்துடன் இயங்கிக் கொண்டிருக்கின்றன. செதுக்கப்பட்டிருக்கும் கல்காரங்களைத் தூக்கி வைத்துப் பொருத்துகின்றனர். கல்காரத் திருப்பணி வேலைகள் நிறைவான பின்னர்தான் செங்கல் கட்டுமானப் பணிகளும், சுதை வேலைகளும்.

எண்பத்து நான்கு அடி உயரத்தில் ஏழு நிலைகள் கொண்ட இராஜகோபுரம் எழும்ப உள்ளது. அதன் திருப்பணிகள் முடிந்த பின்னர், முழுமையான இராஜகோபுரம் கோவை மாநகரின் எந்தப் பகுதியிலிருந்து பார்த்தாலும், பார்வை தரிசனத்துக்குத் தெரியுமாம். அவ்வளவு ஏன்? கோவை மாநகர அடையாளங்களில் ஒன்றாகக் கூட, கோனியம்மன் கோயில் இராஜகோபுரம் அமையலாம்!

இராஜகோபுரத் திருப்பணிக்கென நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றனர். செயல் அலுவலர், அருள் மிகு கோனியம்மன் திருக்கோயில், பெரிய கடை வீதி, கோயமுத்தூர்-641 001



**தொலைபேசி எண்கள்:** 0422-2396821, 2390231.

**வெப்சைட்:** www.kovaikoniamman.org

**மின்னஞ்சல்:** koniamman@bsnl.in

# கோனியம்மன்

**கோ**னியம்மன் அரசாட்சி செய்யும் கோயம்புத்தூர் குறித்த முதல் கல்வெட்டு கோனே குன்மை கொண்டான் என்ற பட்டப்பெயர் கொண்ட கொங்குச் சோழ மன்னன் காலத்தில் ஏற்பட்டிருக்கிறது! அப்போது பேரூர் என்பது பெரிய ஊராகவும், கோவன்புத்தூர் என்பது சிறிய ஊராகவும் இருந்துள்ளன. (இப்போது கோவை பெரிய மாநகரம். பேரூர் பெரிய கிராமம்!) கோவன் என்ற ஓர் அதிகாரியின் கீழ் இருந்த ஊர்தான், கோவன்புத்தூர். அதனை வீர கேரளக் என்கிற கேரள நாட்டரசன் வென்று, அதற்கு 'வீரகேரளநல்லூர்' எனப் பெயரிட்டுள்ளான்.

கி.பி. பதினோராம் நூற்றாண்டுக்கு முன்னரே 'கோவன்' என்கிற மன்னன் இங்கு ஆண்டிருக்க வேண்டும் என்றும் ஆராய்ச்சிகள் தெரிவிக்கின்றன.

சேரர்களுக்குப் பின் கொங்கு நாட்டைச் சோழ மன்னன் ஆதித்யன் (கி.பி.871-907) ஆட்சி செய்துள்ளான். இராஜராஜ சோழன், இராஜேந்திர சோழன் காலங்களில் சிற்றர சர்களை கொங்கு நாட்டுக்கு அனுப்பி

## கல்வெட்டுகளில்...



ஆட்சி புரிந்திருககின் றனர். அவர்களைக் கொங்குச் சோழர்கள் (கி.பி.1004 - 1303) எனக் கல்வெட்டுகள் குறிப்பிடு கின்றன. அதன் பின்னர் மதுரைப் பாண்டியர்களுள் ஒருவனான முதலாம் ஜடாவர்ம சுந்தரபாண்டியன், கொங்கு நாட்டைத் தன்வசப் படுத்தி 'கொங்குப் பாண்டி யர்கள்' எனும் சிற்றரசர்களை நியமித்து ஆட்சி செய்துள் ளான்.



# பழைய சோறு நைவேத்யம்!

மகாராஷ்டிரம், கர்நாடகம், ஆந்திரா ஆகிய மாநிலங்களிலும் கோனியம்மனைக் குலதெய்வமாக வழிபடுகிறார்கள். கர்நாடகத்தின் ஒக்கிலியர் இனத்தவர்கள், அனுப்பக் கவுண்டர்கள், பிள்ளைகள், சேர வேளாளர்கள்... போன்ற சமூகத்தின் பல குடும்பங்களுக்குக் கோனியம் மன் குலதெய்வம். சித்திரை முதல் நாள், ஆவணி வளர்பிறை நாட்களில் அவர்கள் கோவை கோனியம்மன் கோயிலில் சிறப்பு வழிபாடு செய்கிறார்கள். இதில் சற்று வித்தியாசமானவர்கள், மகாராஷ்டிரத்தி லிருந்து வந்து போகும் சேத்தி சமூகத்தவர்தான். ஆடி மாதத்தில் ஏதேனும் ஒரு வெள்ளி அல்லது செவ்வாய்க்கிழமை இங்கு வந்து அம்மனை வழிபடுகிறார்கள். அதுவும் அவர்களது இஷ்ட தெய்வம் ஆதிகோனியம்மன்.

அன்று கோயிலே நிரம்பி வழியும். ஆதி கோனியம்மன் சன்னதியில் பழைய சோறு, கெட்டி தயிர், பழ வகைகள், சப்பாத்தி எல்லாம் வைத்து அன்னைக்கு நைவேத்திய மாகப் படைப்பார்கள். இதில் மற்ற எந்த உணவு வகைகள் கூடினாலும் குறைந்தாலும் கவலை யில்லை. பழைய சோறு கட்டாயம். நூறு வருடங் களுக்கும் மேலாக, மகாராஷ்டிர மாநிலத்தி லிருந்து ஆண்டுதோறும் கோனியம்மன் கோயிலுக்கு வந்து வணங்கிப் போகின்றனர் சேத்தி சமூகத்தினர்! 'பழைய சோறு' நைவேத்யத் துக்கான காரணம்தான் தெரியவில்லை! ●

மைடல் வெவ்ன் (logo)

# பக்தர்கள் பார்வையில்...

கோனியம்மன்

கருணைமிகு கடவுள் கோவை கோனியம்மன்... பக்தர்களை விட்டு நீங்காமல் நிழலாகப் பின்தொடர்வதும், பக்தர்கள் அம்மனை சொந்தத் தாயாகவே பாவித்து அவளின் கரம்பற்றி இடைவெளியின்றி வரத்தையே வாழ்வாகப் பெற்று இருப்பதுமான நெகிழ்ச்சியான பதிவுகள்:

**இந்திரமணி:** ''நாற்பது வருஷமா இந்தக் கோயிலுக்கு வந்துட்டுப் போறேன். எல்லாக் கஷ்டத்திலிருந்தும் என்னைக் காப்பாற்றியக் கடவுள் இந்தக் கோனியம்மன்தான். என்னோட ரெண்டு புள்ளைங்களோட படிப்பும் வாழ்வும் 'ஓஹோ'ன்னு இருக்க இந்த ஆத்தாவோட அருள்தான் காரணம். எத்தனையோ பேருக்கு, அம்மன் மகிமையை எடுத்துச் சொல்லியிருக்கிறேன். பல வருஷம் குழந்தை இல்லாம கஷ்டப்பட்டு அம்மனை வேண்டிக்கிட்டு 'அம்மா'வான பெண்கள் அநேகம்.''


இந்திரமணி



## எல்லோருக்குமான மாமழை!

**இருஷ்ணவேணி மற்றும் மீனாகுமாரி** *(பாப்ப நாயக்கன் பாளையம்):*

''இந்தக் கோயிலில் என் மகளை பெண் பார்க்க மாப்பிள்ளை வீட்டார் வர்றதா சொல்லியிருக்காங்க. இந்தக் கோயிலில் பெண் பார்த்தா, கல்யாணம் சீக்கிரம் முடிஞ்சிடும்னு காலங்காலமா நம்பிக்கை. அம்மன் சந்தோஷமா ஆடியில் கொலுவிருப்பா... அப்போ கல்யாணப் பேச்சை ஆரம்பிச்சா சந்


ஜெயபாரதி


* ரேணுகாதேவி

தோஷமா அவளே 'கெட்டி மேளம் கெட்டிமேளம்'னு குரல் கொடுப்பா.''

**கிருஷ்ணமூர்த்தி:** ''என் தங்கச்சி ஜெயபாரதியைச் சென்னையில கட்டிக் கொடுத்திருக்கேன். எப்போ கோவைக்கு வந்தாலும் ஆத்தாவைப் பார்க்காம போக மாட்டா. அவளை இங்க அழைச்சுக் கிட்டு வர்றதுதான் என்னோட பாக்கியம். பக்தர்களுக்கு உதவுகிற பக்தர்களை ஆத் தாவுக்கு ரொம்பப் பிடிக் கும்.''


* கிருஷ்ணவேணி

**மல்லிகா மற்றும் ரேணுகாதேவி :**

''ஆடி தரிசனம் ஆனந்த வைபவம்னு சொல்லுவாங்க. முப்பது வருஷங்களா நான் ஆத்தாவையே கதின்னு அவ காலடியிலேயே இருக்கேன். நம்பினவங்களுக்கு மட்டு மல்ல; நம்பாமல் விலகி நிற்கிற எல்லோருக்கும் பொதுவாகப் பெய்யும் மாமழை அவள். அம்மா கிட்ட அழுதுகிட்டே நம்மோட குறையைச் சொன்னா, நம்பள சிரிச்சிக் கிட்டே போகும்படி சீராட்டி அனுப்பி வைப்பாள்.''


* மீனாக்குமாரி

''**நா**ன் நல்லதோ கெட் டதோ எல்லாத்தையும் அவ கிட்டே சொல்லிடுவேன். எதைக் கொடுக்கணும்னு? எப்போ கொடுக்கணும்னு ஆத்தாளுக்குத் தெரியும். மனு கொடுக்கிறது மட்டும்தான் மனுஷங்களோட வேலை.''

**கோ**யில் தேர்த் திருவிழாவின், தேரோட்டத்துக்கு இரண்டாம் நாள், கோனியம்மன் தெப்பத் திருவிழா. இந்திர விமானப் பல்லக்கில், உற்சவ அம்மன் சர்வ அலங்காரங்களுடன் புறப்பாடு ஆகிறார். இராஜ வீதி, ஒக்கிலியர் வீதி, ஐந்து முக்கு, பெரியக் கடை வீதி, ஒப்பணக்கார வீதி, வைசியாள் வீதி, சலீவன் வீதி வழியாக வீதியுலா வந்து, வேணுகோபால சுவாமி திருக்கோயில் அடைகிறார். அதிகாலை நான்கு மணியளவில் அங்குள்ள தெப்பக்குளத்தில் தெப்பத்தில் எழுந்தருளி,

# தெப்பத்தில் ஆடி மகிழும் தேவி!






தெப்பக்குளத்தை மூன்று முறை வலம் வருகிறார். தெப்பம் ஆடிய பின்னர், நேர்நிலைத் திடலில் வாணவேடிக்கை. காலையில் கோயிலில் சிறப்பு அபிஷேகம். மாலையில் கொடியிறக்கத்துடன் மாசி மாதத் திருத்தேர் பெருந்திருவிழா நிறைவு பெறுகிறது. ●

# புற்றுநோய்க்கு ஒரே இடத்தில் தீர்வு!

## ONE STOP SOLUTION FOR CANCER

- PET CT SCAN
- All Endoscopies
- Linear Accelerator & Brachy Therapy
- Radiation
- IGRT
- Surgical Oncology
- Medical Oncology



- பெட் சீடி ஸ்கேன்
- அனைத்து என்டோ ஸ்கோபி
- கதிர்வீச்சு
- லீனியர் ஆக்ஸிலரேடர் & உட்கதிர்வீச்சு
- IGRT
- புற்றுநோய் அறுவை சிகிச்சை
- புற்றுநோய் மருத்துவம்

**இலவச ஆலோசனைக்கு:**

**(044) 2246 9200**
**(044) 66 300 300**

**PET CT CENTRE AT CANCER INSTITUTE (WIA)**
**CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR, CH-20**

**24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE**

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL



# 1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Ph: 2246 9200, 66300300 Fax : 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org.
Website: drkamakshimemorialhospital.org.

Registered with the Re... of Newspaper of India under No.1041/57* Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11* Licensed t...
post without prepay... ...cence No.WPP TN / CC (S) DN / 70 / 09 /11* Registered as a Newspaper in Srilanka.